# உதயலன்

என்கிற

# கொற்கைச் சிங்களவன்

---

ஷேக்ஸ்பியர் மஹாகவி ஆங்கில பாஷையில்
எழுதியுள்ள "ஒதெல்லோ என்கிற வெனிஸ் மோரியன்"
என்னும் நாடகத்தை

அ. மாதவையர்

தமிழில் மொழிபெயர்த்தமைத்தது

இந்நூலாசிரியர் இயற்றிய வேறு தமிழ்ப் புத்தகங்கள்:—
"பத்மாவதி சரித்திரம்," "விஜயமார்த்தாண்டம்,"
"முத்து மீனாக்ஷி," "ஒதெல்லோ," "பொதுதர்ம
சங்கீத மஞ்சரி," "புதுமாதிரிக் கல்யாணப்
பாட்டு," "ஆசாரச் சீர்திருத்தம்,"
"திருமலை சேதுபதி," "சித்தார்த்தன்"
முதலியன



சென்னை
["சுதேசமித்திரன்" பவர் பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.
காபிரைட்] 1918 [விலை 12 அணா.

# நாடக பாத்திரங்கள்.

| | | |
|---|---|---|
| கொற்கையாளி | ... | கொற்கை நகரத்து அதிபதி. |
| பிறைபூண்டான் | ... | கொற்கை மந்திரிகளில் ஒருவன். |
| வேறு மந்திரிகள் | ... | ... ... |
| கிருஷ்ணன் | ... | பிறைபூண்டான் தம்பி. |
| லக்ஷ்மணன் | ... | பிறைபூண்டான் உறவினன் ஒருவன். |
| உதயலன் | ... | கொற்கைச் சேனாபதியாகிய உயர் குலச் சிங்களவன் ஒருவன். |
| காசிபன் | ... | உதயலன் உபசேனாபதி. |
| அகாதன் | ... | உதயலன் துவசதாரி. |
| இரட்டையன் | ... | கொற்கை நகரத்தான் ஒருவன். |
| மந்தானன் | ... | உதயலனுக்கு முன் செப்பறை அதிகாரி. |
| இசைமோகினி | ... | பிறைபூண்டான் மகள்; உதயலன் மனைவி. |
| ஏமலீலை | ... | அகாதன் மனைவி. |
| ப்ரியாங்கனை | ... | காசிபன் வைப்பாட்டி. |

உத்தியோகஸ்தர், கிரகஸ்தர், ஏவலர், தூதர்.

## கதை நிகழிடம்.

முதல் அங்கம் கொற்கை நகரில்; மிகுந்தவை கொற்கையிராச்சியத்தைச் சேர்ந்த செப்பறைத் தீவிலுள்ள ஒரு துறைமுகப்பட்டினத்தில்.

# உதயலன்

## அல்லது

# கொற்கைச் சிங்களவன்

—∞∞—

## முதல் அங்கம்.

---

### முதல் காட்சி.

*கொற்கை நகரில் ஒரு வீதி—நள்ளிரவு.*

[இரட்டையனும் அகாதனும் பேசிக்கொண்டு வருகிறார்கள்.]

இர:—அடபோ! என்னிடத்திலா இதெல்லாம்? பெட்டி எனதும் சாவி உனதுமென என் பணத்தையெல்லாம் கையாண்டு வந்தாயே, அகாதா; அப்படியிருக்க, நீ இதையறிந்தும் சும்மா விருந்தது, என் மனத்தை மிகவும் உறுத்துகின்றது.

அகா:—கடவுள் அறிய,—ஆனால் நான் சொல்வதைத் தான் நீ கடைசிவரையும் கேட்கிறதில்லையே; சங்கதி இவ்விதமென்று நான் சொப்பனமாவது கண்டிருந்தால், நீ என்னை முற்றிலும் வெறுக்கலாம்.

இர:—அவன்மேல் உனக்குப் பகை என்று சொன்னையே நீ.

அகா:—இல்லாவிடின் நீ என்னை நிந்திக்கலாம். இந்நகரத்துப் பிரபுக்கள் மூவர், தாங்களே நேரில் சென்று அவனைத் தாழ்மையுடன் வணங்கி, என்னை அவன் உபசேனைபதியாக்கும்படி வேண்டி

னர்:—உண்மையில் என் யோக்கியதை எனக்குத் தெரியும்: நான் அந்த வேலைக்கு அருகனே. ஆனால், அவனோ, யுத்த முறைக்குரிய வசனங்களைப் பயமுறும்படி பகட்டியடுக்கி, "என் உபசேனாபதியை நான் நியமித்தாய் விட்டது; இனிச் செய்யக்கூடியது ஒன்றுமில்லை" என்று, சாக்குப் போக்குச் சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டான. ஆகட்டும், அவன் எப்படிப்பட்டவன் தெரியுமோ? ஒரு பெரிய கணக்கப்பிள்ளை; மிகுவேல் காசிபன் என்று பெயர்; பழைய ஊரான்; அவன், யுத்தகளத்தில் தளம் வகுத்தவனுமில்லை, கொட்டைநூற்கும் குமரியினும் அதிகமாகப் போரணிவகுப்புத் தெரிந்தவனுமில்லை. இப்படிப்பட்டவன், சமயம் வாய்த்த பொழுது, உபசேனாபதி யாக வேண்டுமாம்; யானோ, தெய்வ கிருபையை முன்னிட்டு, அவர் சிங்கள னத்துக்குத் துவசதாரியாக இருக்க வேண்டுமாம்;

இர:—சுவாமி சத்தியமாக, நானானால், இப்படியிருப்பதினும் அவனைக் கழுவில் ஏற்றுமவனாகவேனும் இருக்க விரும்புவேன்.

அகா.—எல்லாம் வேறு போக்கில்லாமல்தான்; சேவகத் தொழிலின் சாபம் இது : முன்னவன், வேலைக்குப் பின்னவன் என்று படிப்படியாய் முன்போ லில்லாமல், சிபார்சுக் கடிதங்களையும் அபிமானத்தையும் பொறுத்து மேல்வேலை கொடுக்கப்படுகிறது. ஆகவே, நீயே ஆலோசித்துப் பாரப்பா, அந்தச் சிங்களவன் மேல் நான் பக்ஷமா யிருக்க ஏதாவது நியாயமுண்டோ ?

இர:—நானுனல் அவனிடம் வேலை பார்க்கவே மாட டேன்.

அகா:—சற்றுப் பொறு, அப்பா, பொறு; நான் அவனை விடாதிருப்ப தெல்லாம், சமயம் பார்த்து என் சேஷ்டையைக் காட்டும் பொருட்டுத்தான் : உல கத்திலே, எல்லாரும் எஜமானர்களாய் இருத்த லும் முடியாது, எல்லா எஜமானர்க ளிடத்திலும் உண்மையுடன் சேவிப்பதும் முடியாது; தம் எஜ மானரின் பொதிக் கழுதைகளைப் போல, கேவலம் கும்பியை நிரப்புவதற்காக, தம் இழிவான அடி மைத் தனத்தை மிகவும் அபிமானித்து, வெகு பௌவ்யமா யுழைத்துத் தம் காலத்தைக் கழிக் கும் மூடர்களான ஊழியக்காரர் அனேகரை நீ காணலாம். வயதானவுடன் இவர்கள் வேலையினின் றும் தள்ளப்படுகிறார்கள் : இப்பேர்க்கொத்த வெள்ளைத்தன வேலைக்காரர்களைச் சவுக்கால் அடித் தாலும் தகும். வேலைக் கடமைகளின் வெளித் தோற்றங்களிலும் பாவனைகளிலும் தேர்ந்த வேறு சில வேலைக்காரரும் உண்டு : இவர்கள் கருத்தெல் லாம் தங்கள் காரியத்திலேயே ; எஜமானருக்குத் தொண்டு புரிவது போல் நடித்துக் காட்டி, அவர் கள் செலவில் நன்கு செழித்துத் தங்கள் வாய்க் கால்களைப் பெருக்கிக் கொண்டான பின்பு, இவர் கள் சுவாதிகாரிக ளாய்விடுவார்கள்; இந்தப் பயல் கள் தாம் கொஞ்சம் ரோஷமுள்ளவர்கள்; நானும் இப்படிப்பட்டவனே. என் மனத்தின் சுவபாவத் தையும் அந்தரங்க எண்ணங்களையும் என் வெளிப் படையான நடவடிக்கைகளும் மரியாதையான ஒழுக்

கங்களும் உள்ளபடி வெளியிட்டால், என்னை ஒரு முழு மூடனுக நீ வைத்துக் கொள்ளலாம்; நான் வெளிக்குத் தோற்றுகிறபடி உண்மையிலில்லை.

இர:—இவ்வாறு சங்கதியைமட்டும் அவன் முடித்துக் கொண்டுவிட்டால், அந்தக் கருந்தடியன் பாக்கியமே பாக்கியம்!

அகா:—அவள் தகப்பனைக் கூவி யெழுப்பு: அவனை விடாது தொடர்ந்து, அவன் களிப்பில் நஞ்சிடு; அவன் பாக்கியம் கிடக்க, உன்னுல் இயன்ற உபத்திரவங்களை உண்டுபண்ணி, அதை நிறங்குன்றச் செய்.

இர:—இதுதான் அவள் தகப்பன் வீடு; நான் உரத்துக் கூவுகிறேன்.

அகா:—செய்; ஜனசஞ்சாரமான பட்டணங்களில் அஜாக்கிரதையினுல் இராக்காலத்தில் தீப் பிடித்துக் கொண்டாற்போல, நடுங்கிய பயங்கரமான தொனியில் கூக்குரலிடு.

இர:—என்ன, ஓய் பிறைபூண்டாரே! பிறைபூண்டாரே! ஓய்!

அகா:—எழுந்திரும்! என்ன, ஓய் பிறைபூண்டாரே! திருடர்கள்! திருடர்கள்! திருடர்கள்! உம் வீட்டையும் மகளையும் பணப்பைகளையும் பார்த்துக் கொள்ளும்! திருடர்கள்! திருடர்கள்!

[மேல் மாடத்தில் ஒரு பலகணியின்கண் பிறைபூண்டான் தோன்றுகிறுன்.]

பிறை:—இந்தப் பயங்கரமான கூக்குரலுக்கு என்ன காரணம்? அங்கே என்ன விசேஷம்?

இர:—ஐயா! தங்கள் குடும்பத்தார் எல்லாரும் உள்ளே இருக்கிறார்களோ?

அகா:—கதவுகள் பூட்டப்பட்டிருக்கின்றனவோ?

பிறை:—ஏன், எதற்காகக் கேட்கின்றீர்கள்?

அகா:—ஐயா! சத்தியமாகவே, நீர் கொள்ளை கொடுத்து விட்டீர்! இப்பொழுது, இப்பொழுதே, இந்த நிமிஷத்திலேயே கிளம்பும், கிளம்பும்; குறட்டை விட்டுறங்கும் நகர வாசிகளை யெல்லாம் மணி குலுக்கி யெழுப்பும்; கிளம்பும் என்கிறேனே!

பிறை:—என்ன! உங்களுக்குப் பைத்தியமா?

இர:—மகாகவுரவப்ரபோ! என் குரலை அறிவீர்களோ?

பிறை:—யானறியேன்; யார் நீர்?

இர:—என் பெயர் இரட்டையன்.

பிறை:—அதற்காக உன் வரவை அதிகம் வெறுக்கின்றேன். என் வீட்டு வாயிலில் அடிக்கடி வந்து உபத்திரவம் செய்யாதே என்று, யான் உனக்கு ஆஞ்ஞாபித் திருக்கின்றேன்; என் மகளை உனக்குத் தரமாட்டேனென்று, யான் ஒளிப்பின்றி வெளிப்படையாய்க் கூறியதை நீ கேட்டிருக்கின்றாய்; இங்ஙனமிருக்க, இப்பொழுது, விலாப் புடைக்கத் தின்று குடித்து வெறிகொண்டு மதி மயங்கி, தீச் சிந்தையுடன் என்னைத் தொந்தரை செய்யத் துணிந்து வந்திருக்கின்றனை நீ.

இர:---ஐயா, ஐயா, ஐயா,—

பிறை:—ஆனால், இதை உனக்குக் கசப்பாக்க என்னால் முடியுமென்பதை, நீ திடமாய் அறிந்திருத்தல் வேண்டும்.

இர:—நற்குண கனவானே! பொறுங்கள்.

பிறை:—கொள்ளைப் பேச்சென்ன? இது கொற்கை நகரம்; என் வீடு, காட்டு மடமன்றே.

இர:—மகாகனம்பொருந்திய பிறைபூண்டாரே! கபடமில்லாமலும் நல்லெண்ணத்தோடுமே நான் தங்களிடம் வந்திருக்கிறேன்.

அகா:—ஐயா, சத்தியமாகவே, 'தெய்வத்தை வணங்கு' என்று பிசாசு புத்தி சொன்னால், கூறுவது பைசாசமென்று, அவ்வாறு செய்யாதவர்களில் ஒருவர் போலும் நீர். உம்முடைய பேரர் பேர்த்திகளும் சந்ததியாரும் சிங்களத்துப் பரியினமாகிக் கனைப்பது உமக்குச் சம்மதம் போலவே தோற்றுகிறது.

பிறை:—எங்கே கிடந்த ஊத்தைவாய்ப் பதரடா நீ?

அகா:—ஐயா, நான் உமக்கு இதைச் சொல்ல வந்தேன்: உம்முடைய மகளும் சிங்களவனும்—,

பிறை:—நீயொரு பாதகனே.

அகா:—நீரோ, ஒரு—மதி மந்திரி!

பிறை:—உன்னை யானறிவேன் இரட்டையா; நீதான் இதற்கு உத்தரவாதி.

இர:—ஐயா, எதற்கும் உத்தரவாதம் செய்கிறேன். உடனே தங்கள் மனத்தைத் திருப்தி செய்து கொள்ளுங்கள்; தன் அறையிலாவது, தங்கள் வீட்டிலாவது, தங்கள் மகள் இருந்தால், இவ்விதம் தங்களை ஏமாற்றிய என்னை நியாய தண்டனைக்கு உள்ளாக்குங்கள்.

பிறை:—யாரங்கே! சக்கிமுக்கியைத் தட்டி வெளிச்

சம் பொருத்து; எனக்கு ஒரு வர்த்தி கொடு; என் ஜனங்களைக் கூப்பிடு; இந்த விபத்து, என் கனவுபோலவே இருக்கின்றது; என் மனத்தில் நம்பிக்கை உண்டாகி விட்டது; வெளிச்சம்! கொண்டுவா வெளிச்சம்!

[மேனிலையில் மறைகிறான்.]

இர:—சரி, நான் போகவேண்டும்; இனி உன்னுடனிருந்தால் சிங்களவனுக்கெதிராகச் சாக்ஷி சொல்லவேண்டிவரும்; அது சரியன்று, என் வேலைக்கு அடுத்ததுமன்று; ஏனெனில், இதற்காக இராசாங்கத்தார் அவனை எவ்வளவு கண்டித்தபோதிலும், சேனாபதி யுத்தியோகத்தைவிட்டு நீக்கத்துணியார் என்பதை நானறிவேன். இப்பொழுது நடந்துகொண்டிருக்கும் செப்பறைத்தீவு யுத்தத்தின் பொருட்டு அவன் கப்பலேறச் சித்தமாயிருப்பது, யாவரும் அறிந்த விஷயம். அந்த யுத்தத்தில் தூரைத்தன காரியத்தைச் சரிவர நடத்தி முடிக்க, அவனைப் போல் கைதேர்ந்த சமர்த்தர் வேறொருவருமே இல்லை. ஆகவே, நரகவேதனையைப்போல் நான் அவனை வெறுப்பினும், தற்கால ஜீவனார்த்தமாக, பக்ஷமுள்ளவன்போல் பாசாங்கு பண்ண வேண்டியிருக்கிறது. ஆனால் அது கேவலம் பார்வைக்கு மட்டுமே. அவனைத் தப்பாமல் கண்டுபிடிக்கவேண்டுமானால், நீ எழுப்பித்திரட்டிய தேடுகூட்டத்தை அம்புக்குறிமடத்துக்கு அழைத்துவா; நான் அவனுடன் அங்கே யிருப்பேன்; போய்வருகிறேன்.

[போகிறான். கீழே பிறைபூண்டானும், தீவர்த்திகளுடன் வேலைக்காரர்களும் வருகிறார்கள்.]

**பிறை:**—இத்தீவினையிற் சந்தேகமேயில்லை; அவள்போ யேவிட்டாள்; இனி என் இழிவுண்ட வாழ்நாளில் நேரக்கூடிய தெல்லாம் துன்பமே.இரட்டையா! நீ அவளை எங்கே பார்த்தாய்? ஐயோ துர் அதிர்ஷ்டப்பெண்ணே!—சிங்களவனோடு என்று சொல்கின்றாய்? யாவரோ தந்தையாயிருப்பர்?—அவள்தா னென்று எங்ஙனம் அறிந்தனை? ஓ! அவள் என்னை நினைப்பரிய வண்ணம் வஞ்சிக்கின்றாள்!—உன்னிடத்தில் என்ன சொன்னாள்?—இன்னும் சில தீவர்த்திகள் கொண்டு வாருங்கள்; என் உறவினரை யெல்லாம் எழுப்புங்கள்,—அவர்கள் விவாகம் முடிந்திருக்கு மென்று நினைக்கின்றாயா?

**இரா:**—மெய்யாகவே, விவாக மாய்விட்ட தென்றே எண்ணுகிறேன்.

**பிறை:**—ஐயோ, தெய்வமே! அவள் எங்ஙனம் வெளியேறினாள்? ஐயோ துரோகமே!—தந்தைகளே! இனி உங்கள்பெண்களின் வெளியொழுக்கத்தைக் கொண்டு, நீங்கள் அவர்கள் மனங்களை உணர்ந்ததாக நம்பாதீர்கள்—இளமையையும் கன்னிப் பருவத்தையும் கெடுக்கவல்ல வசிய மந்திரங்களுளவன்றோ? அப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றி நீ வாசித்ததில்லையா, இரட்டையா?

**இர:**—ஆம், ஐயா, நான் வாசித்திருக்கிறேன்.

**பிறை:**—என் தம்பியைக் கூப்பிடு.—ஐயோ! நீயாவது அவளைக் கலியாணஞ் செய்துகொண்டா யில்லையே!—சிலர் ஒரு வழி, சிலர் வேறு

வழி. — அவனையும் சிங்களவனையும் எங்கே கண்டு பிடிக்கலாம், உனக்குத் தெரியுமா ?

**இர:**—தாங்கள் தயைசெய்து நல்ல காவலாளிகளைச் சேர்த்துக்கொண்டு என்னுடன் வந்தால், அவனை நான் கண்டுபிடித்துத் தரக் கூடுமென்றுஎண்ணுகிறேன்.

**பிறை:**—தயைசெய்து வழிகாட்டிச் செல். ஒவ்வொரு வீட்டுக்காரரையும் கூப்பிடுகிறேன்; அநேகமாய் எல்லாவீடுகளிலும் என் அதிகாரம் செல்லும்— யாரங்கே ! ஆயுதங்கள் கொண்டுவாருங்கள்!இராக் கால உத்தியோகஸ்தர் சிலரை எழுப்புங்கள்— நட, இரட்டையா! உன் சிரமத்துக்குத் தக்கவாறு பிரதியுபகாரம் செய்வேன்.

(போகிறார்கள்.)

---

இரண்டாம் காட்சி.

கொற்கை நகரில் மற்றொரு வீதி—பின் இரவு.

[உதயலனும், அகாதனும், தீவர்த்திகளுடன் வேலைக்காரரும் வருகிறார்கள்.]

**அகா:**—யுத்தங்களில் எத்தனையோ பேரை நான் கொன்றிருந்தும், வேண்டுமென்று முன் சூழ்ந்து ஒரு கொலை செய்ய மனச்சாக்ஷி சிறிதும் ஒப்ப வில்லை. சில வேளைகளில், எனக்கே நன்மைதரக் கூடிய மனவன்மை என்னிடமில்லை. ஏழெட்டுத் தரம் அவரை விலாவிலே ஒரே குத்தாய் குத்தி விடலாமென்று எண்ணினேன்.

**உத:**—அப்படி யொன்றும் செய்யாததே உத்தமம்.

**அகா:**—இல்லை என்கிறேன், தாறுமாறாக அப்படிஉளறி னார் அவர்; தங்களைப்பற்றி அவ்வளவு அவமரி

யானையாகவும் நடுக்காகவும்பேசினர்; எனக்குள்ள சொற்ப பயபக்தியுடன், அவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டு சகித்திருப்பது அரிதாய்விட்டது. அஃதிருக்கட்டும்: ஐயா, தங்கள் விவாகம் முடிந்துவிட்டதோ, இல்லையோ? ஏனெனில், இது நிச்சயம்: அந்தப் பிரபு எல்லாருக்கும் வேண்டியவர்; மிக்க செல்வாக்குடையவர்; அவர் தங்களைப் பிரித்துவிடுவார்; அல்லது, சட்டப்படி தங்களுக்கு எவ்வளவு இடையூறுகளும் துன்பமும் விளைக்க முடியுமோ அவ்வளவையும், தம் அதிகாரத்துக்கும் சக்திக்கும் எட்டியமட்டும் செய்வார்.

உத:—அவர் பகைமையைச் செலுத்தட்டும். யான் துரைத்தனத்துக்குப் புரிந்துள்ளஊழியங்கள், அவர் முறையீடுகளை யெல்லாம் நாவடக்கிவிடும். தற்புகழ்ச்சி கவுரவகுண மென்றேற்படும் சமயத்தில் யான் வெளிப்படுத்துவேன்: கண்டியில், சிங்கவாசனத்திருந்தவர் வம்சத்தில் யான், பிறந்தவனென்பதை இன்னும் யாரும் அறியார்; என் யோக்கியதையும், இப்பொழுது யான் அடைந்திருக்கும் பெரும்பதவியுடன் சமத்துவமாக அளவளாவத் தக்கதேயன்றி, யான் தலைவணங்கும்படி தாழ்ந்ததன்று. யான் சொல்வதைத் தெரிந்துகொள், அகாதா: உயர்குலத் திசைமோகினியின் மேல் எனக்குக் காதல்மட்டும் இல்லாவிடின், குடும்பப் பற்றில்லாத என் சர்வசுதந்திர பிரமசாரிய நிலைமையை, கடலளவு ஐசுவரியம் கிடைப்பினும், யான் இவ்வாறு வரைகோலிச் சிறையிட மாட்

டேன். அம்மெதென்ன, நோக்கு! அதோ வருகின்ற வெளிச்சங்கள் என்ன?

அகா:—அவர்கள் தாம், எழுப்பப்பட்ட தந்தையும் அவர் நண்பர்களும்: நீங்கள் உள்ளே போவதே உத்தமம்.

உத:—யானோ போவேன்? யான் அவர்கள் கையில் அகப்படவே வேண்டும்: என் சீலமும், தகுதியும், மாசற்ற நெஞ்சமும், யான் செய்தது குற்றமல்ல வென்று நிரூபிக்கும். அவர்கள் தாமோ அது.

அகா:—ஆறுமுகன் ஆணை! அவர்களல்ல வென்று எண்ணுகிறேன்.

[தீவர்த்திகளுடன் காசிபனும் சில உத்தியோகஸ்தரும் வருகிறார்கள்.]

உத:—அதிபதியின் சேவகாரும் என் உபசேனாதிபதி யுமே.—நண்பர்களே! இவ்விரவு உங்களுக்கு நல்ல தாகட்டும்! என்ன சமாசாரம்?

காசி:—சேனாபதி! அதிபதி, இந்த நிமிஷமே, அதி தீவிர அவசரமாய்த் தங்களைக் காண விரும்பு கிறார்.

உத:—சங்கதி என்னவென் றெண்ணுகிறாய்?

காசி:—செப்பறைத் தீவிலிருந்து தெரியவந்த ஏதோ விஷயம் போலிருக்கிறது. தங்களை அவசரமாய் அழைத்திருக்கிறார்கள். வாசஸ்தலத்தில் தங்களைக் காணமையால், அதிபதி, தங்களைத் தேடிப் பிடிக்க மூன்றுபேரைத் தனித்தனியே அனுப்பி யிருக்கிறார்.

உத:—நீயே என்னை முதலில் கண்டதாலமாயிற்று;

இங்கு, வீட்டில் ஒரே ஒரு வார்த்தை சொல்லி விட்டு, உன்னுடன் வந்து விடுகிறேன்.

[போகிறான்]

காசி:—துவசதாரி! இங்கே என்ன செய்கிறார் இவர்?

அகா:—மெய்யாகவே, இன்றிரவு ஒருபெரிய நிலக் கப்பல் பிடித்திருக்கிறார். அதுமட்டும் சட்டப்படி இவருக்குத் தக்கிவிட்டதோ, பின்பு இவருக்கு வேறொன்றுமே வேண்டியிராது.

காசி:—நீ சொல்வது புரியவில்லையே.

அகா:—இவர் விவாகம் செய்து கொண்டுவிட்டார்.

காசி:—யாரை?

[உதயலன் திரும்பி வருகிறான்.]

அகா:—யாரையா?-வாருங்கள், தலைவரே, போவோமா?

உத:—இதோ வந்து விட்டேன்;

காசி:—தங்களைத் தேட, இதோ, வேறொரு கூட்டத்தார் வருகிறார்கள்.

அகா:—அவர் தாம் பிறைபூண்டார்;—சேனாபதி, என் புத்தியைச் சற்றுக் கேளுங்கள்; அவர்கெட்ட எண்ணத்தோடு வருகிறார்.

[பிறைபூண்டானும், இரட்டையனும், தீவர்த்திகள் ஆயுதங்களுடன் உத்தியோகஸ்தரும் வருகிறார்கள்.]

உத:—அதார்! நில் அங்கே!

இர:—ஐயா! அவன்தான் சிங்களவன்.

பிறை:—வெட்டிக் கீழே வீழ்த்துங்கள், திருடனை!

[இருதிறத்தாரும் வாள்களை யுருவுகிறார்கள்.]

இர:—ஏ இரட்டையா! வா, அப்பா, நீயும் நானும் ஒரு கை பார்ப்போம்.

உத:—பனியினுல் துருப்பிடித்துவிடாமல, உஙகள பளபளப்பான வாள்களை உறைகளி லிடுங்கள். நற்குண ப்ரபோ! தங்கள் ஆயுதங்களால் பார்க்கினும், தங்கள் மூப்பினுல் என்னை அதிகமாக ஏவல்கொள்ளலாம்.

பிறை:—அடே கெட்ட திருடா! என் மகளை எங்கே ஒளித்து வைத்திருக்கின்ருய்? மகா பாபியாகிய நீ, அவளை மந்திரங்களால் மயக்கிவிட்டாய். அவளோ, மேன்மையும் அழகும் சௌபாக்கியமும் நிறைந்த கன்னிகை; விவாகத்துக்குச் சிறிதும் இணங்காது, எங்கள் சுவதேசத்தாரில் செல்வம் நிறைந்த எழிலிளங் குமரரையெல்லாம் வெறுத்து விலக்கியவள்; புத்தி புத்தி அநுபவத்துக்கிசைய எப்படி ஆலோசித்துப் பார்க்கினும், இத்தன்மையினள், மந்திரத்தனைகளால் மதியழிந்து கட்டுண்டிருந்தாலொழிய, யாவரும் பரிகசிக்கும்படித் தன் காவல் கடந்தோடிச்சென்று, களிப்பின்றி அச்சத்தையே தாக்கூடிய உன் கறுப்புக் கடாலிங்கனத்துக்கு ஒரு பொழுதும் இசைந்திருக்கவேமாட்டாள். ஆகையினுல், தூராகிருதமான, நியாய விரோதமான தொழில்களை அப்பியசித்து உலகைக் கெடுக்கும் ஒருவனுக, யான் உன்மேல் குற்றஞ்சாட்டுகிறேன்; இவனைப் பிடியுங்கள்; மீறியெதிர்த்தால், இவனுக்கு நேரக்கூடும் சேதத்தை எண்ணுது, அடக்குங்கள்.

உத:—என்னைச்சார்ந்தவர்கள், மற்றவர்கள், ஒருவரும் கைநீட்டாதேயுங்கள். கலகஞ்செய்வது தகுதியென்று யான் எண்ணினுல், அதற்கு ஒருவர்

தூண்டுதல் எனக்கு வேண்டியிருந்திராது. தாங்கள் சாட்டிய இந்தக் குற்றத்துக்கு உத்தரவாதஞ் சொல்ல, யான் எங்கே செல்லவேண்டும்?

பிறை:—காலக்கிரமத்தில், இதற்கேற்ற சட்ட விசாரணை தொடங்கி, உன்னைப் பிரதிவாதஞ் சொல்ல அழைக்கும் வரையும், சிறைச்சாலைக்குப் போக வேண்டும்.

உத:—இதற்கு யான் கீழ்ப்படிந்து நடந்தாலென்ன? துரைத்தனக் காரியமாக என்னை உடனே தம்மிடம் அழைத்துவரும்படி இதோ என் பக்கத்தில் நிற்கும் வேவுகாரரை அனுப்பியிருக்கும் அதிபதி, அதை எப்படி யொப்புவார் ?

முதல் உத்தியோகஸ்தன்:—மகா கண்ணியம் பொருந்திய ப்ரபோ! இது மெய்தான்; அதிபதி இராச சபையில் இருக்கிறார். தங்கள் கனத்தையும் அழைத்துவர ஆள் போயிருக்குமென்பது நிச்சயம்.

பிறை:—எப்படி! இரவில், இந்த வேளையில், அதிபதி மந்திரசபையுட னிருக்கிறாரா! இவனைக் கொண்டு வாருங்கள்; என் முறையீடு சாதாரணமானதல்ல; அதிபதியும், என் போன்ற மந்திரிகள் பிறரும், இத் தீமையை அவரவர்க்கு நேர்ந்ததுபோலவே நினைப்பார்களென்பது திண்ணம்; ஏனெனின், இம் மாதிரியான நடவடிக்கைகள் தடையின்றி நடந்து கொண்டிருந்தால், அடிமைகளும் அஞ்ஞானிகளும் நம் துரைத்தனப் பரிபாலகராய் விடுவார்கள்.

[யாவரும் போகிறார்கள்.]

---

மூன்றும் காட்சி.

*கொற்கை அரமனையில் சபாமண்டபம்—வைகறை.*

*[கொற்கையாளியும் மந்திரிகளும் வீற்றிருக்கின்றனர்; உத்தியோகஸ்தர் ஏவல் செய்து நிற்கின்றனர்.]*

கோ-ஆ:—இந்தச் சமாசாரங்கள் நம்பும்படி முன்பின் ஒத்திருக்க வில்லையே.

*[ஒரு தூதன் வருகிறான்.]*

தூதன்:—மகா சன்னிதானத்துக்கு விஞ்ஞாபனம். அராபியர், ஊருணித்தீவை நோக்கி நேராக மரக்கலங்களைவிட்டு, அங்கே வேறொரு கப்பற் படையுடன் சேர்ந்து கொண்டார்கள்.

1-வது-மந்:—ஆம், அப்படியே நினைத்தேன்—உன்மதிப்பில் எத்தனை கப்பல்களிருக்கும்?

தூதன்:—முப்பது பாய்கொண்டது; இப்பொழுது, மறுபடியும் ஒளிப்பின்றிச் செப்பறைத்தீவை நோக்கித் திரும்பிவிட்டார்கள். உண்மையினும் ஊக்கத்திலும் சிறந்த தங்கள் காரியஸ்தர் மந்தானனர், தம் வந்தனங்களை அளித்து, சமூகத்தில் இதைத் தெரிவிக்கச் சொன்னார். தாங்கள் இதை நம்பும்படி பிரார்த்திக்கிறார்.

1-வது-மந்:—இதோ, பிறைபூண்டாரும் சிங்களவீரரும் வருகிறார்கள்.

*[பிறைபூண்டான், உதயணன், அகாதன், இரட்டையன், உத்தியோகஸ்தர், இவர்கள் வருகிறார்கள்.]*

கோ-ஆ:--உதயணரே! பொது விரோதியாகிய அராபியரை எதிர்க்க, உம்மை யுடனே நியமிக்கவேண்டியிருக்கின்றது. [பிறைபூண்டானை நோக்கி] யாம் உம்மைப்பார்க்கவில்லை; உம் வரவு நல்லதாகுக!

இன்றிரவு உமது ஆலோசனையும் உதவியும் இல்லாமை ஒரு குறைவாகவேயிருந்தது.

பிறை:—நானும் அப்படியே தாங்களில்லாத குறையை யுணர்ந்தேன். மஹாப்ரபோ! பொறுத்தருளுங்கள்: என் உத்தியோகமன்று, துரைத்தனக் காரியங்களைச் செவியுற்றதுமன்று, நான் படுக்கை விட்டெழுந்ததற்குக் காரணம்; இப்பொழுதுள்ள பொதுக்கவலை என்மனத்திற் பற்றவுமில்லை; ஏனெனின், என் சொந்த வியாகுலம், தன் அளப்பரிய பெருமையாலும், அடங்காத உக்கிரத்தாலும், மற்றைக் கவலைகளையெல்லாம் மேலிட்டு விழுங்கி விட்டுத் தானே என் மனத்தில் நிறைந்திருக்கின்றது.

கோ-ஆ:—ஏன், என்ன விசேஷம்?

பிறை:—என் மகள்! ஐயோ, என் மகள்!

கோ-ஆ:மங்:—இறந்தனளா?

பிறை:—ஆம், என்மட்டில் இறந்தேவிட்டாள்; சூனியக்காரரிடம் பெறப்பட்ட மந்திரங்களினாலும் மருந்துகளினாலும் அவள் கெடுக்கப்பட்டு, என்னிடத்தினின்றும் திருடப்பட்டு, கற்பழிவுண்டிருக்கிறாள். குருடு, பொறியூனம் முதலிய குறைவுகளொன்றுமில்லாதிருக்க, சூனிய மந்திரவாதமின்றி, ஒருபொழுதும் இயற்கை நிலை இவ்வளவு விபரீதமாகத் தவறியிருக்க முடியாது.

கோ-ஆ:—இவ்வாறு துன்மார்க்கத்தில் உம் மகளை மதிமயக்கிப் புகுத்தி, உமது காவலினின்றும் கடத்தியவன் எவனேயாயினும்,நீர் சாட்டுங் குற்றத்துக்குட்

பட்டவன் நம் உரிமை மகனே யாயினும், அவனுக்கு, உம் அபிப்பிராயப்படி, நீரே தர்ம சாஸ்திரங்களில் ஏற்பட்ட கொரே தண்டனையை விதிக்கலாம்.

பிறை:—மிகத்தாழ்மையுடன் வந்தனமளிக்கின்றேன். அவன் இந்த மனிதன்தான், இந்தச் சிங்களவனே; துரைத்தன விஷயமாகத் தங்கள் அவசரக்கட்டளையால் இப்பொழுது இங்கு வந்திருக்கும் இவனே.

கோ-ஆ; மந்:— நாங்கள் இதற்கு மிகவும் மனம் வருந்துகின்றோம்.

கோ-ஆ:—[உதயலனை நோக்கி] நீர் இதற்கு என்ன சொல்லுகிறீர்?

பிறை:—இவ்துஉண்மையே என்பதைத்தவிர வேறில்லை.

உத:—சர்வாதிகாரமும், ஆழ்ந்த சிந்தையும், கவுரவமும் பொருந்திய அதிபதியே! கனவான்களே! அதிகம்பீர குணமும் சீலமும் வாய்ந்த என் அருமை இறைவர்களே! இந்தக் கிழவர் மகளை யான் கொண்டுபோய்விட்டது முற்றிலும் உண்மையே; யான் அவளை விவாகஞ் செய்து கொண்டதும் உண்மையே. என் குற்றமெல்லாம் இவ்வளவே; மேலில்லை; என் பேச்சோ முரட்டுத்தன்மையது; வாக்குநயமும் சாதுரியமு மாகிய பாக்கியத்தை யான் பெற்றவனில்லை. ஏனெனில், என் புயங்கள் ஏழாண்டுச் சதைப்பற்றுக்கொண்டது முதல், இப்பொழுது வீணாகக்கழிந்த ஒன்பது மாதங்களுக்கு முன்வரையும், இப்புயங்கள் விழைந்துசெய்த முக்கிய பிரவர்த்திகளெல்லாம் கூடாரங்களடித்தபோர்க்களத்திலேயே நிகழ்ந்தன. ஆகவே, சண்டை சச்

சரவுகளைச் சார்ந்த வீரச்செய்கைகளைத்தவிர, இந்த
மாநிலத்து விஷயங்களைப்பற்றி யான் அதிகமாகப்
பேசவும் முடியாது; என் விஷயத்தை இப்பொழுது
யானே எடுத்துப் பேசுவதில், என் கட்சிக்கு
அதிக அநுகூலமுமிராது. ஆயினும், என் காத
லின் விருத்தாந்த முழுவதையும் உள்ளபடி சிறி
தும் மழுக்காது கூறி; என்மேற் குற்றஞ் சுமத்தப்
பட்டபடி, என்ன மருந்தீடுகள், என்ன வசிய பந்
தனங்கள், என்ன மஹாமந்திர சக்திகளைக்கொண்டு,
இவர் மகளின் காதலைப் பெற்றே னென்பதையும்
வெளியிடுகிறேன்; தாங்கள் தயைகூர்ந்து பொறு
மையோடு கேட்கும்படி பிரார்த்திக்கிறேன்.

**பிரா:**—கந்நிகையோ, ஒரு காலத்திலும் துணிவுள்ளவ
ளல்ல. தன்னைக்கண்டே நாணுறுமளவு அச்சமும்
அமைதியும் மடமும் நாணமும் பொருந்தியவள்;
அப்படிப்பட்டவள், வயது, ஜநந பூமி, அந்தஸ்து,
ஒன்றுமே பொருத்தமில்லாதிருக்க; தான் கண்
ணெடுத்துப் பார்க்கவுமே அஞ்சிய ஒருவன்மேல்,
இயற்கை விரோதமாகக் காதலுற வேண்டு
மானால்!—எல்லா நற்குணமும் நிறைந்துள்ளவள்,
சகல இயற்கைப் பிரமாணங்களுக்கும் மாறுபாடாக,
இவ்வாறு தவறியொழுகக் கூடுமென்று, திடமான
சுயபுத்தியுள்ளவர் யார் தாம் ஒப்புக்கொள்வர்?

**1-வது-மந்:**—அஃதிருக்கட்டும்: உதயலரே, நீர் சொல்
லும்: இவ்விளங் கந்நிகையின் மனத்தை நேரல்
லாத பலாத்காரமான வழிகளால் வசப்படுத்திக்
கெடுத்து, அவள் காதலை நீர் கொண்டீரா ?

அன்றேல், மனத்தோடு மனமிசைந்து நீர் வேண்டிக்கொண்டதின்மேல், அவள் இணங்கினளா?

உத—அம்புக்குறி மடத்துக்கு ஆளனுப்பி, அவளை இங்கு வரவழைக்க வேண்டுகிறேன்; அவள் தந்தையின் முன்னிலேயில் என்னைப்பற்றி அவளே பேசட்டும்; அவள் வாக்குமூலத்தினுல் என்மேல் குற்றமிருப்பதாக விளங்கினுல், என்னிடம் வைத்திருக்கும் நம்பிக்கையைத் துறந்து, என்னை வேலையினின்றும் நீக்குவதேயன்றி, எனக்கு மரண தண்டனையும் விதிக்கலாம்.

கோ. ஆ:—திசைமோகினியை இங்கே அழைத்துவா.

உத:—துவசதாரி, அவர்களைக் கூட்டிக் கொண்டு போ; அவ்விடம் உனக்கே நன்ருய்த் தெரியும்.

[அகாதனும் வேலைக்காரரும் போகிருர்கள்.]

அவள் வரும்வரை, கடவுள் சாக்ஷியாக, அந்த அழகிய சீமாட்டியின் காதலை யானும், என் காதலை அவளும், எவ்வாறு அடைந்தோமென்பதை உள்ளபடி தங்கள் செவியுறக் கூறுகின்றேன்.

கோ. ஆ:—சொல்லும், உதயலரே.

உத:—அவள் தந்தை என்மேற் பக்ஷமாயிருந்தார்: அடிக்கடி என்னைத் தம் வீட்டுக்கழைத்தார்; ஆண்டாண்டாக என் வாழ்வின் விருத்தாந்தத்தையும், யான் சம்பந்தப்பட்ட சண்டைகள் முற்றுகைகள் ஆபத்து சம்பத்துகளையும் சொல்லச்சொல்லிக் கேட்டார். பிள்ளைப் பருவம் தொடங்கி, அவர் வினவிய நிமிஷம் வரையும், யான் அதை விவரமாய்ச் சொன்னேன். அதில், பெருங்கேடான

சம்பவங்களையும், நீரிலும் நிலத்திலும் நிகழ்ந்த பரிதாபமான விபத்துக்களையும், முற்றுகை செய்த கோட்டை மதில்களில், உடனே பிராணஹானி நேரக்கூடிய துவாரங்களினூடு நுழைவதில் மயிரளவு தப்பி உயிர் பிழைத்ததையும், இறுமாப்புற்ற எதிரிகள் என்னைச் சிறைப்படுத்தி அடிமையாக விற்றதையும், அடிமையினின்று மீண்டதையும், பின்பு செய்த பிரயாணத்தில் நடந்துகொண்ட விதத்தையும், அப்பிரயாணத்தில் கடந்த பெருங் குகைகளையும், பாழான பாலைவனங்களையும், கரடுமுரடான கற்சுரங்கங்களையும் பாறைகளையும், விண்ணுலகை அளாவித் தொடும் சிகரங்களையுடைய குன்றுகளையும் பற்றிப் பேச நேர்ந்தது. இதைக் கேட்க, திசைமோகினி வெகு ஆவலாய் விரும்புவாள்; ஆனால், வீட்டுவேலையினிமித்தம், யான் கதை சொல்லும் இடம்விட்டு அவள் அடிக்கடி போக நேரிடும்; அதைக்கூடிய சீக்கிரத்தில் முடித்துவிட்டுத் திரும்பி வந்து, என் வார்த்தைகளைப் பருகுவதுபோல் பேராவலுடன் செவிக்கொள்வாள்:— இதை யான் கண்டு, ஒரு தக்க சமயம் பார்த்துக் கொண்டேன்: முழுதும் கவனமாகவின்றி, இங்கே சிறிது அங்கே சிறிதாகமட்டுமே தான் கேட்டிருந்த என் பிரயாண விருத்தாந்த முழுவதையும், தனக்கு விவரமாய்க் கூறவேண்டுமென்று, மிக்க விருப்புடன் அவளே யென்னைப் பிரார்த்திக்கும்படி செய்தேன்; அவள் வேண்டுகோளுக் கிசைந்தேன். என் இளமையிலே யான் அநுபவித்த சில துக்ககரமான விபத்துகளைக் கேட்க, அவளுக்கு அடிக்

கடி தானறியாமலே கண்ணீர்பெருகிற்று. என் கதை முடியவே, அவள், என் கஷ்டங்களுக்காக அளப்பரிய பெருமூச் செறிந்தாள்; 'உண்மையாக வே, இந்து ஆச்சரியமானதே, மிகவும் ஆச்சரிய மானதே; இது பரிதாபமானதே, மிகவும் பரிதாப மானதே; இதைக் கேளாதிருந்தேனில்லையே; ஆயி னும், எனக்குக்கடவுள் இப்படி ஒருபுருஷனையளிக்க விரும்புகிறேன்' என்று, வற்புறுத்திச் சொன்னாள். எனக்கு வந்தனமளித்தாள்; என் சிநேகிதன் எவ னாவது அவள்மேற் காதல் கொண்டிருந்தால், என் கதையைச் சொல்ல அவனுக்கு யான் கற்றுக் கொடுத்துவிடமட்டும் வேண்டுமென்றும், அதைக் கேட்டவுடன் தன் மனம் அவன்வய மாகிவிடு மென்றும் சொன்னாள். இந்தக் குறிப்பை உணர் ந்துகொண்டு, யான் என் காதலை வெளியிட்டேன். எனக்கு நேர்ந்த அபாயங்களின்பொருட்டு அவள் என்மேல் காதல் கொண்டாள்; அவற்றின்பொரு ட்டு அவள் பட்ட பரிதாபத்துக்காக, யான் அவள் மேல் காதலுற்றேன். யான் பிரயோகித்த வசிய மந்திரமெல்லாம் இதுதான்; இதோ அவள் வரு கிறாள்; அவளே சாக்ஷி சொல்லட்டும்.

[திசை மோகினியும், அகாதனும்,
வேலைக்காரரும் வருகிறார்கள்.]

கோ-ஆ:—இந்தக் கதை, என் மகள் மனத்தையும் கவர் ந்துவிடுமென்றே நினைக்கிறேன்:-பிறைபூண்டாரே, போனது போகட்டும்; நடந்துவிட்டதில் நல்ல தையே கொள்ளும்; வெறுங்கைகளிலும் முறிந்த ஆயுதங்களையுடைய கை சிலாக்கிய மென்றே உல கம் மதிக்கும்.

**பிறை:**—தயைசெய்து அவள் என்ன சொல்கிறாள், கேளுங்கள். இந்தக் காதல் விஷயத்தில், தானே பாதி பிரவர்த்தித்ததாக அவள் ஒப்புக்கொண்டு, அதன்பின் இந்த மனிதன்மேல் நான் குறைகூறினால், என் தலையில் இடி விழட்டும்! அம்மா, சீமாட்டி, இங்கே வா; இந்தப் பிரபுக்கள் சங்கத்தில், நீ யாருக்கு அதிகமாகக் கீழ்ப்படிந்து நடக்கக் கடமைப்பட்டிருக்கிறாயென்பது தெரிகிறதா?

**திசை:**—கண்ணியமுள்ள தந்தையே, இங்கு என் கடமை ஒரே தலையாகவின்றி, பிரிந்து காணுகிறது. என் உயிருக்கும் வித்தியாப்பியாசத்துக்கும் நான் உமக்குக் கடமைப்பட்டவள்; என் உயிர் வாழ்க்கையும் கல்விப்பயிற்சியும் உமக்கு மரியாதைசெய்யும் முறையை எனக்குக் கற்பிக்கின்றன; நீர் என் கடமைக்குரியவர்; இதுகாறும் நான் உம்முடைய மகளே: ஆனால், என் மணவாளர் இதோ இருக்கிறார்; தம் தந்தையினும் உம்மையே அதிகமாகக் கொண்டு என் தாயார் உமக்கு எவ்வளவு உரிமை பாராட்டினாரோ, அவ்வளவு உரிமை யானும் என் நாதராகிய இந்தச் சிங்களவருக்குச் செலுத்தலாமென் றெண்ணுகிறேன்.

**பிறை:**—உன்னைத் தெய்வமே காக்க! என் வேலை முடிந்து விட்டது;—அரசே! தயைகூர்ந்து துரைத்தன வேலைகளிற் பிரவேசியுங்கள்; ஒரு குழந்தையைப் பெற்றெடுப்பதினும் சுவீகாரஞ்செய்து கொள்வதே நலமென்றுதோற்றுகிறது—வ சிங்களவ, இங்கு வா: என் இஷ்டப்படியெனின், ஒருபொழுதும் என் மனதார உனக்கிவளைக் கொடுக்கமாட்டேன்

ஆனால், முன்னமே உன்கைவசமாய்விட்டபடியால், மனப்பூரணமாக உனக்கிவளை இதோ கொடுக்கிறேன். அரசே! யான் சொல்லவேண்டியதெல்லாம் சொல்லியாயிற்று.

கோ-ஆ:—மிகப்பலமான படையெடுப்போடு அராபியர் செப்பறைத் தீவைநோக்கிச் செல்கின்றனர்:—உதயலரே! அத்தீவின் காவற்படை விவரம் உமக்கே நன்றாய்த்தெரியும். ஆதலின், இப்பொழுது நீர்புது மணம்புரிந்து அடைந்துள்ள அதிர்ஷ்டத்தின் பிரகாசத்தையெல்லாம், கடினமும் கம்பலையுமே நிறைந்தவேலையாகிய படைத்தலைமையைமேற்கொண்டு, சிறிது கறைப்படுத்திக் கொள்ளவேண்டும்.

உத:—மகாகனம்பொருந்திய இராச சபையோர்களே! நீக்கல்லினாலும்ளகிெனாலும் செய்தஅமளிபோன்ற யுத்தப் பிரவர்த்தியானது, கடுமையான பழக்கத்தால், எனக்கு, மும்முறை கடைந்தெடுத்த மென்தூவி மெல்லணையாய்விட்டது. வன்றொழில்களில் எனக்கு உற்சாகமும் இயல்பான குதூகலமும் உண்டாயிருப்பது மெய்யே; இப்பொழுது அராபியரை எதிர்த்து நேரும் யுத்தங்களைநடத்த யான் ஒப்புக்கொள்கிறேன். ஆதலின், தங்கள் கனத்தை வந்தித்து, என் மனையாட்டியின் தகுதிக்கும் வழக்கத்துக்கும் தக்கவண்ணம், இருப்பிடம் பரிசன முதலியவை நியமிக்கும்படி, மிகவும் தாழ்மையாய் வேண்டிக்கொள்கிறேன்.

கோ-ஆ:—உமக்குச் சம்மதமானால், அவள் தன் தகப்பனார் வீட்டிலிருக்கட்டும்.

பிறை:—எனக்கு அப்படிச் சம்மதமில்லை.

உத:—எனக்கும் சம்மதமில்லை.

திசை:—எனக்கும் அப்படியே; கண்முன்னிருந்து என் தந்தையாருக்கு எப்பொழுதும் கோபத்தைஉண்டு பண்ணிக்கொண்டு நான் அங்கு வசிக்கமாட்டேன். கருணாசாகரமாகிய அரசே! நான் சொல்லப்புகுவதற்குத் தாங்கள் நற்செவியுதவி, நான் வெள்ளறிவினளாதலின், தங்கள் வாக்கு சகாயத்தால் என் வேண்டுகோளைப் பலப்படுத்துங்கள்.

கோ-ஆ:—உன்னிஷ்டமென்ன, திசைமோகினி?

திசை:—எப்பொழுதும் இவர் கூடவே வாழத்துணியும் அளவு, நான் இந்தச் சிங்களவரைக் காதலித்தேன் என்பதை, வெகு துடுக்காகப் பிடிவாதங் கொண்டும், அதிர்ஷ்ட சம்பத்துக்களை உதறியெறிந்து துறந்தும் நான் இவருடன் வெளிப்பட்டதே உலகத்துக்குப் பறையறைந்து தெரிவிக்கும். என் இருதயம் என்னுதரது மனோபாவத்துக்கு ஒத்துப் படிந்துவிட்டது. இவர் அகத்தழகையே நான் இவர் முகத்தழகாகக் கண்டேன். இவர் கௌரவ நிலைக்கும் தீரகுணங்களுக்கும் என் ஆத்மாவையும் வாழ்க்கை நலன்களையும் அர்ப்பணஞ் செய்துவிட்டேன். ஆதலின், அரசே, விட்டிற் பூச்சிபோலச் சமாதானமாய் வாழும்படி நான் இங்கு விடப்பட்டு, இவர் மட்டும் யுத்தத்துக்குச் சென்றால், எந்தக் கடமைகளின் பொருட்டு நான் இவரைக் காதலிக்கின்றேனோ அவற்றை நானிழந்து, இவரது அரிய பிரிவை ஆற்ற மாட்டாது, மிகவும் துன்புறுவேன். நான் இவருடன்செல்ல விடைகொடுங்கள்.

உத :—தாங்கள் அநுமதி அளியுங்கள்; இவன் மனோபீஷ்டத்தை நிறைவேற்றும்படி பிரார்த்திக்கிறேன்.

கோ-ஆ :—இவள் இங்கே தங்குகிறதோ, கூடப்போகிறதோ, அதைநீங்களுக்குள் முடிவு செய்து கொள்வதுபோலாகட்டும். காரியமோ அவசரமானது; அதற்கேற்றபடி துரிதம் செய்ய வேண்டும்.

1-வது. மந் :—நீர் இன்றிரவே புறப்படவேண்டும்.

உத :—இருதய பூர்வமாய் அப்படியே.

கோ. ஆ :—காலை ஒன்பது மணிக்கு இங்கு நாம் மறுபடியும் கூடுவோம். உதயலரே, உம்முடைய நியமன ஸந்நதையும், உம்முடைய தகுதிக்கும் கௌரவத்துக்கும் வேண்டிய விஷயங்களைப்பற்றிய உத்திரவையும் பின்பு கொண்டுவர, யாவனுயினும் ஒருத்தியோகஸ்தனை இங்கு விட்டுப்போம்.

உத :—தாங்கள் விடை கொடுத்தால்,என் துவசதாரியை விட்டுப்போகிறேன். இவன் நாணயமும் நம்பிக்கைக்குரிமையுமுள்ள மனிதன். என் மனைவியை அழைத்து வரும்படிக்கும், தாங்கள் எனக்கு அனுப்ப விரும்பும் மற்ற அவசியமான பொருள்களைக் கொண்டு வரும்படிக்கும், இவனை நியமிக்கிறேன்.

கோ. ஆ :—அப்படியே ஆகட்டும்,—யாவர்க்கும் நல்லிரவாகுக.—பிறைபூண்டாரே, நற்குண சீலத்துக்குக் கண்பகட்டான வெளியழகு அவசியமில்லையெனின், உமது மருமகன் கறுப்பாயிருப்பதினும் அதிசுந்தர புருஷராகவே யிருக்கிறார்.

1-வது. மந் :—போய் வாரும், சிங்கள வீரரே; திசை மோகினியை நன்கு ஆதரியும்.

பிறை :—உனக்குப் பார்க்கக் கண்களிருந்தால் இவளைப் பார்த்துக்கொள், சிங்களவ; இவள், பெற்ற தகப்பனை வஞ்சித்து விட்டாள், உன்னையும் அப்படியே செய்யக்கூடும்.

[கொற்கையாளி, மந்திரிகள், உத்தியோகஸ்தர், முதலியோர் போகிறார்கள்.]

உத :—இவள் கற்புக்கு என் உயிரையே பணயம் வைப்பேன்! நாணயமுள்ள அகாதா, என் திசைமோகினியை உன்வசம் விட்டுப்போகிறேன்; உன் பெண் சாதியை இவளுக்குச் சேடியாக்கும்படி வேண்டுகிறேன்! தக்க சௌகரியத்துடன், அவர்களைப் பின்பு அழைத்துவா. வா, திசைமோகினி; காதலுக்கும், மற்ற விஷயங்களைப்பற்றி ஏற்பாடு செய்து உன்னுடன் கழிக்கவும்,இன்னும் ஒரு மணி அவகாசந்தான் எனக்கிருக்கிறது. காலத்துக்குக் கீழ்ப்படிந்து நாம் நடந்து கொள்ள வேண்டும்.

[உதயலனும் திசைமோகினியும் போகிறார்கள்.]

இர :—அகாதா!

அகா :—என்ன சொல்லுகிறாய் அப்பா, சீலவானே?

இர :—நானென்ன செய்யப் போகிறேனென்றெண்ணுகிறாய்?

அகா :—என்ன, படுத்துத் தூங்குகிறது தான்.

இர :—நான் இக்ஷணமே நீரில் மூழ்கி யிறக்கப் போகிறேன்.

அகா :—நீ இப்படிச் செய்தால், பிற்பாடு, ஒரு பொழு

தும் உன்மேல் நான் பசூதமாயிருக்கவே மாட்டேன். எதற்காக அப்பா, அறிவீனரேறே.

இர :—உயிர்வாழ்க்கை கொடுந்துயராயிருக்கையில், உயிரோடிருத்தலே அறிவீனம்; அப்பொழுது, கூற்றுவனே நமக்கு வைத்தியனும், சாவே ஏற்ற ஔஷதமுமாம்.

அகா :—அடேயப்பா ! என்ன புத்திசாலித்தனமடா! நானும் இந்த உலகத்தை நாலேழுவருஷங்களாகப் பார்த்துக் கொண்டு வருகிறேன்: எனக்கு இலாபமிது நஷ்டமிது என்று பகுத்தறியும் சக்தி வந்த நாள் முதல் இதுவரையும், தன்னயத்தைச் செவ்வையாயறிந்து நடக்கக் கூடியவனொருவனையாவது நான் கண்டதே யில்லை. ஒரு விலைமாதின் காதலுக்காக நான் மூழ்கியிறப்பேனென்று சொல்வதினும், நானென்றால், மனுஷத் தன்மையை மாற்றிக் கொண்டு,கேவலம் மூடாத்மாவாகிய குரங்காகிவிட இசைவேன்.

இர :—நான் என்ன செய்வேன்? இவ்வளவு மூடத்தனமாயிருத்தல் எனக்கு மானக்குறைவே யென்று ஒப்புக் கொள்கிறேன்; ஆனால், அதைத் திருத்த எனக்கு மனவலிமை யில்லையே?

அகா :—மனவலிமையா! மண்ணாங்கட்டி! நம்முடைய மனநிலை இப்படியோ அப்படியோ என்பது, நம் கையிலேயே யிருக்கிறது. போதும், ஆண்தன்மையைக்காட்டு; மூழ்கியிறக்கிறதா! பூனைகளையும் குருட்டு நாய்க்குட்டிகளையு மன்றோ மூழ்கியிறக்கச் செய்வது! நான் உன்பால் சிநேகம் பாராட்டிவிட்

டேன்; உனக்குதவிசெய்ய இதிலும் நல்ல சமயம் எனக்கு வாய்க்காது; உன் பையில் பணத்தை நிரப்பிக் கொள்; இந்த யுத்தங்களுக்குக் கூடவே வா; ஒரு பொய்த்தாடி தரித்து, வேஷம் மாற்றிக்கொள்; என் சொற்படி பணமெடுத்துப் பையில் வைத்துக் கொள்; திசைமோகினிக்குச் சிங்களவன் மேலுள்ள காதல் நீடித்திருக்க முடியாது; உன் பையிற் பணத்தை எடுத்துக்கொள்;-அவனுக்கு அவள் மேலுள்ள காதலும் அப்படியே: அது முற்றிலும் சுபாவவிரோதமாய்த் தொடங்கியது; அதற்கேற்க அவர்கள் பிரிவதையும் நீ காண்பாய்;—உன் பையில் பணம் மட்டும் எடுத்து வைத்துக்கொள்;— சிங்களவர்கள் திடசித்த மில்லாதவர்கள்!—உன் பையைப் பணத்தினால் நிரப்பிக்கொள்; அவள் மாறவே மாறுவாள், அது நிச்சயமே; ஆகையினால், உன் பையில் பணமெடுத்துவை;—சாகவேவேண்டு மென்றெண்ணினால், மூழ்கியிறப்பதினும் வேறு நேர்மையானவிதமாக உயிரை விடு. உன்னால் சேர்க்கக்கூடிய பணம் அவ்வளவையும் சேர்த்துக்கொள்; ஒருநிலையின்றித் திரியும் காட்டான் ஒருத்தனும், உத்தமிபோல் நடிக்கும் வெகு சூதுக்காரியாகிய கொற்கை நகரத்தாள் ஒருத்தியும், தங்களுக்குள் செய்துகொண்ட ஓர் அற்ப பிரதிக்ஞையை, என் மதிவலியால் கெடுத்து விட முடியு மெனில், உனக்கு அவளைக் கொடுக்கிறேன்; பணமெடுத்துக் கொள். மூழ்கியிறக்கிறதெல்லாம் பாழாயிற்று! அது முற்றிலும் தவறே. அவளை அநுபவியாது மூழ்கியிறப்பதைவிட, உன் மனோபீஷ்டத்தைப்

பலாத்காரமாய் நிறைவேற்றிக் கொண்டு, அதனால் தூக்கிலிடப்படுவதையேனும் நீ தேட வேண்டும்.

இர:—நான், உன் ஆலோசனைப்படி நடந்தால், நீ என்னைக் கைவிடாது உதவி செய்வாயா?

அகா:—என்னைப்பற்றிக் கவலையேவேண்டாம்:—போ, பணத்தைத்திரட்டு:—எனக்கு அந்தச் சிங்களவன் மேற் பகை என்று, அடிக்கடி நானுனக்குச் சொல்லியிருக்கிறேன்; இப்பொழுதும் வற்புறுத்திச் சொல்லுகிறேன்: அப்பகைமை என்மனத்தில் வேரூன்றியிருக்கிறது; உன் பகைமைக்கும் தக்க காரணமிருக்கிறது. நாமிருவருமாகச் சேர்ந்து அவன்மேற் சலஞ்சாதிப்போம்; நீ அவனுக்குத் தீங்கிழைத்தால், உன்மனம் சந்தோஷமடையும், எனக்கும் அஃது ஒரு விளையாட்டே. இப்பொழுது காலங்கருவுற்றிருக்கும் அநேக சங்கதிகள் பின்பு வெளிப்படும்; நட, போ, பணத்துக்கேற்பாடு செய். நாளை இதைப்பற்றி இன்னும் பேசுவோம்; போய் வா.

இர:—காலையில் எங்கே சந்திப்போம்?

அகா:—என் விடுதியில்.

இர:—அதிகாலையில் வருகிறேன்.

அகா:—சரி: போய்வா. நான் சொல்வது கேட்கிறதா, இரட்டையா?

இர:—என்ன சொல்லுகிறாய்?

அகா:—மூழ்கியிறக்கிற பேச்சு இனிக்கூடாது, கேட்கிறதா?

இர:—நான் மாறிவிட்டேன்; என் பூஸ்திதியை யெல்லாம் விற்கப்போகிறேன்.

அகா:—சரி; போய் வா; பையில் போதுமான பணமட்டும் எடுத்துக்கொள்.

[இரட்டையன் போகிறான்.]

(தனிமொழி.) இப்படித்தான் எப்பொழுதும் நான் மூடர்களை என் பணப்பையாக்கிக்கொள்கிறது; ஏனெனின், விளையாட்டாகவும் இலாபத்தையுத்தேசித்துமன்றி இவ்வளவு வெள்ளறிவனோடு என் காலத்தை நான்வீண் போக்கினால், நான் சம்பாதித்த உலக அநுபவ ஞானத்தைப் பாழாக்கியதாகும். நான் சிங்களவனை வெறுக்கிறேன்; அவன் என் மனைக்கு மோசஞ் செய்து விட்டானென்று வெளியே பிரஸ்தாபம்; அது மெய்யோ பொய்யோ அறியேன்; ஆனால், அவ்விதமான வெறுஞ் சந்தேகத்துக்காக, அந்த உண்மையாயிருந்தால் என்ன செய்வேனோ அப்படியே செய்வேன். அவனுக்கு என் மேல் நல்ல அபிப்பிராயமுண்டு; ஆகவே, என் காரியம் வெகு நன்றாய்ப்பலிக்கும். காசிபனோ நல்ல சுந்தர புருஷன்: ஆலோசித்துப் பார்க்கட்டும்: அவன் ஸ்தானத்தைப்பெற்று, என் உத்தேசத்தையும் இரட்டிப்பான வஞ்சனையால் நிறைவேற்றிக் கொடிக்கட்டவேண்டும். எப்படி,—எப்படி,— ஆலோசிப்போம்:—சிறிதுகாலம் பொறுத்து, அவன், அவன் பெண்சாதியுடன் மட்டுக்கு மிஞ்சியுறவாடுகிறானென்று உதயலன் காதில் பறறவைக்கிறது:—அவன் ஆள், ஆகிருதி, நயமானநடவடிக்கைகளைப் பார்த்தால், யாரும்சந்தேகிப்பார்கள்; பெண்டிர்களை நெறி தப்பி ஒழுகச் செய்வதற்கே பிறந்தவன். சிங்களவனோ,

மிகவும் கபடமற்ற சுவபாவமுதன்; யோக்கியர்களாகக் காணப்படுபவர்கள் உண்மையில் யோக்கியர்களே யென் றெண்ணுகிறான்; குரங்கைப்போல் அவனை யெப்படி வேண்டினும்ஆட்டிவைக்கலாம்.இதுதான் யுக்தி:—கருக் கொண்டு விட்டது:—இந்தக் குரூபமான யுக்திப்பிற வியை, கொடுமையான வஞ்சகத்தால் இரகசியமாய் முதிரச்செய்து, வெளிப்படுத்தவேண்டும். [போகிறான்.]

## இரண்டாம் அங்கம்.

### முதல் காட்சி.

செப்பறைத்தீவில் ஒரு துறைமுகப் பட்டணம்:
கடற் கரையருகே ஒரு தட்டு மேடு—மாலை.
[மந்தானனனும், இரண்டு கிரகஸ்தரும் வருகிறார்கள்.]

மந்:—அந்த முனையிலிருந்து பார்த்தால், கடலில் என்ன தெரிகிறது?

முதல்-கி:—ஒன்றுமே தெரியவில்லை: அலைகள் கொந்தளித்தோங்குகின்றன: வானத்துக்கும் கடலுக்கும் இடையே கப்பலொன்றுங் காணப்படவில்லை.

மந்:—நிலத்திலும் காற்று உரத்து வீசியுள்ளதென் றெண்ணுகிறேன்; இதிலும் பெருங்காற்று நம் அலங்கத்தில் அடித்ததேயில்லை; இப்படியே கடலி லும் அடித்திருந்தால், மலைபோன்ற அலைகள் மேல்விழுந்து மோதப்படுதலினால், எந்த மரக் கலங்கள்தாம் சிதறுறாது தாங்கக்கூடும்? இதனி மித்தம் என்ன சமாசாரம் வருமோ?

2வது-கி:—அராபியர் மரக்கலத்தொகுதி பிரிவு பட்டுப் போயிற்றென்பதே: நுரை ததும்பும் கரை மேல் நின்று பார்த்தால், கண்டிக்கப்பட்ட அலைகள் மேகங்களின் மேற் கல்லெறிவனபோற் காணுகின்றன. காற்றாலலைப்புண்ட வாரிதி, குரூபமாயோங்கியெழும் பிடரிமயிராகிய அலைகளினால், எரிந்து கொண்டிருக்கும் சப்தருஷிநக்ஷத்திரங்களின் மேல் நீரை வீசி, அசுவினிநக்ஷத்திரங்களையும் அவிப்பதுபோலிருக்கின்றது. கோபமுற்ற சாகரத்தில் இவ்விதக் கம்பலையை நான் கண்ணுற்றதேயில்லை.

மங்:—அராபியர் கப்பற்படை துறைமுகத்துக்குள் ஒதுங்கியிராவிட்டால், அவர்கள் மூழ்கிப்போனவர்களே; இதைத் தாங்கிப் பிழைக்க முடியாது.

[மூன்றாவது கிரகஸ்தன் ஒருவன் வருகிறான்.]

3வது-கி:—ஓ இளைஞர்களே! நற்சமாசாரம். நம்முடைய யுத்தங்கள் முடிந்துவிட்டன. இந்தக் கடுமையான சூறாவளியால் தாக்குண்டு, அராபியர் உத்தேசமெல்லாம் தடைப்பட்டு நின்றுவிட்டது: கொற்கையிலிருந்து வந்த ஒரு பெரிய கப்பல் மிகவும் உடைபட்டுப் பெரும்பாகமும் சேதப்பட்டிருக்கிறது.

மங்:—எப்படி, இது மெய்தானா?

3வது-கி:—அந்தக் கப்பல் இங்கு வந்திருக்கிறது; பழையகாயல் வேலை அது; யுத்தவீரச் சிங்களவர் உதயலரின் உபசேனாபதி, மிகுவேல் காசிபர், கரையில் வந்திருக்கிறார். இத்தீவுக்குச் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டு, சிங்களவரும் வருகிறாராம்; ஆனால், இன்னும் அவர் கடலிலேயே யிருக்கிறாராம்.

மங்:—எனக்கு அது சந்தோஷமாயிற்று. அவர் தக்க தலைவர்; ஆள்கைக்கு ஏற்றவர்.

3வது-கி:—ஆனால் நான் சொன்ன இந்தக் காசிபர் அரா பியரடைந்த நஷ்டத்தைப்பற்றி ஆறுதலாய்ப் பேசுகின்றாராயினும், சிங்களவர்க்ஷேமத்தைப்பற்றி மனங்கவன்று கடவுளைப் பிரார்த்திக்கின்றார்; அவர்கள் பிரியும் பொழுது வெகு மும்முரமான கெட்ட சூறைக் காற்று அடித்துக் கொண்டிருந்ததாம்.

மங்:—அவர் க்ஷேமத்துக்குக்காகக் கடவுளைப் பிரார்த்திப்போம்; நான் அவரிடத்தில் சேவித்திருக்கிறேன்; அவர் உத்தமமான யுத்தவீரனைப்போல் இராணுவத் தலைமை நடாத்துகிறார். நாம் கடற்பக்கம் செல்வோம்: வந்திருக்கும் கப்பலையும் பார்க்கலாம், உதயல வீரர் வரவையும், வானமும் வாரிதியும் மயங்கித் தோன்றுமாறு கண்பூக்குமளவும் உற்று நோக்கலாம்.

3வது-கி:—வாருங்கள், அப்படியே செய்வோம்; ஒவ்வொரு நிமிஷமும் புது வரவை யெதிர்பார்க்குஞ் சமயமாயிருக்கிறது.

[காசிபன் வருகிறான்.]

காசி:—யுத்த சன்னதமாயிருக்கும் இத்தீவில் வாழும் வீரர்களே! சிங்களவரை யிவ்வளவு மெய்ச்சுவதற்கு நான் வந்தனமளிக்கின்றேன். நான் அவரை அபாயகரமான கடலில் தவறவிட்டு வந்திருக்கின்றேன்; நீரும் காற்றுமாகச் செய்யும் இவ்வாபத்தினின்றும் கடவுள் அவரைக் காப்பாற்றுவாராக.

மங்:—அவர் கப்பல் பலமானதா?

காசி:—அவர் நாவாய் திண்ணமான மரத்தாற் செய்யப்பட்டது; அவர் மாலுமியும் பெயர்பெற்ற அதிசமர்த்தன்; ஆதலின் நான் அடிக்கடி மோசம் போய் நம்பிக்கையை இழக்காமல், நல்முடிவைத் தைரியமாயெதிர்பார்த்திருக்கிறேன்,

[உட்புறத்தில்] ஒரு கப்பல்! ஒரு கப்பல்! ஒரு கப்பல்!
[நான்காவது கிரகஸ்தன் ஒருவன் வருகிறான்]

காசி:—என்ன கூக்குரல்?

4-வது-கி:—பட்டணம் காலியாய்விட்டது; ஜனங்களெல்லாரும் கடல் விளிம்பில் வரிசை வரிசையாக நின்றுகொண்டு, "ஒரு கப்பல்" என்று கத்துகிறார்கள்.

காசி:—அக்கப்பலில் வருபவர் 'கவர்னர்' என்றே நம்புகிறேன்.

[பீரங்கிச் சத்தம் கேட்கப்படுகிறது.]

2-வது-கி:—நல்வரவேற்று மரியாதையாகக் குண்டு சுடுகிறார்கள்: நம்முடைய சிநேகிதர்களென்பது திண்ணம்.

காசி:—ஐயா, தயைசெய்து போய், வந்திருப்பது யாரென்று உண்மை தெரிந்து வந்து சொல்லும்.

2-வது-கி:—ஆகட்டும், [போகிறான்]

மந்:—அஃதிருக்கட்டும், நல்ல உபசேனபதி, உங்கள் தளகர்த்தருக்குக் கல்யாணமாய்விட்டதா?

காசி:—அதி பாக்கியமாக முடிந்திருக்கிறது: வருணிக்க முடியாதவளும், இதுகாறும் பெரும்பேர்பெற்ற அழகையெல்லாம் மிஞ்சினவளுமான ஒரு கன்னிகையை அவரடைந்திருக்கிறார்; அதி சாதுரியமான

கனிவருணனைக்கெல்லாம் மேற்போனவள்; இயற்கையமைப்பிலேயே சகல மேம்பாட்டையும் பெற்றவள்.

[இரண்டாவது கிரகஸ்தன் திரும்பி வருகிறான்.]

என்ன சங்கதி? வந்தது யார்?

2-வது-கி:—சேனாபதியின் துவஜதாரி யாம்; அகாதர் என்றொருவர்.

காசி:—அவன் க்ஷேமமாய் சுபசீக்கிரமாகவே வந்திருக்கிறான்: சண்டமாருதங்களும், கொந்தளிக்கும் அலைகளும், ஊளையிடும் ஊதைகளும், குற்றமற்ற மரக்கலங்களைத் தடுக்குந் துரோகிகளாக நீருள் வைக்கப்பட்டிருக்கும் பிளவுபட்ட பாறைகளும், மணற்றிடர்களுங்கூட அழகின் சுவையை யுணர்ந்தனபோன்று, ஆரணங்கன்ன திசைமோகினி க்ஷேமமாய்ச் செல்லும்படி வழிவிட்டுவிட்டன.

மங்:—அவள் யார்?

காசி:—நான் கூறியவள், நம்முடைய பெரிய தலைவனுக்குந் தலைவி; தைரியசாலியாகிய அகாதன் அவளை அழைத்துவர நியமிக்கப் பட்டிருந்தான். எங்கள் உத்தேசத்துக்கு ஒருவாரத்துக்கு முன்னராகவே, இப்பொழுது அவன் இங்கு வேகமாய் வந்து சேர்ந்திருக்கிறான். ஜகதீசா! உதயலனைக் காத்து, உனது அதிவேகமான மூச்சையே அவரது கப்பற்பாயிற் றுக்கச்செய்து, அவர் நெடியநாவாய் இந்தக் குடாக்கடல் வந்தடையவும், திசைமோகினியின் தோள்கள் காதல் தழைத்துப்

புளகாங்கிதங்கொள்ளவும், அவிந்தோய்ந்த எங்கள் மனவூக்கம் திரும்பவும் சுவாலைகொண்டு கிளர்ந்தோங்கவும், செப்பறைத்தீவில் யாவரும் சுபமுறவும் கிருபை செய்வாயாக! ஆ! ஆ! பாருங்கள்!

[திசைமோகினியும், ஏமலீலையும், அகாதனும், (வேஷ மாறிய) இரட்டையனும், ஏவலரும் வருகிறார்கள்]

கப்பலின் செல்வ மெல்லாம் கரைக்கு வந்து விட்டது! செப்பறை வாசிகளே, அவளை அஞ்சலி செய்து வணங்கக் கடவீர்; அம்மணீ, வாழி! தெய்வானுக்கிரகம், முன்னும் பின்னும் எப்புறமும் தங்களைச் சூழ்வதாக!

**திசை:**—காசிப வீரரே! உமக்கு வந்தனமளிக்கிறேன். என்னுதரைப் பற்றி யென்ன சமாசாரம் எனக்குச் சொல்லலெல்லீர்!

**காசி:**—அவரின்னும் வந்து சேர்ந்திலர்; நானறிந்த மட்டும் அவர் சௌக்கியமா யிருக்கிறார்; சீக்கிரம் இங்கு வந்து சேர்வார்.

**திசை:**—ஓ! ஆனால் எனக்குப் பயமாயிருக்கிறது:—நீங்களெங்ஙனம் இணைபிரிந்தீர்கள்?

**காசி:**—வானத்துக்கும் வாரிதிக்கும்நடந்த பெரும்போர் எங்களைப் பிரிந்து விட்டது:—[உட்புறத்தில்] "ஒரு கப்பல், ஒரு கப்பல்!" ஆனால், உற்றுக்கேளுங்கள்: ஒரு கப்பல்.

[பீரங்கிச்சத்தம் கேட்கிறது.]

**2-வது- சி:**—கோட்டைக்கு மரியாதையாகக் குண்டு சுடுகிறார்கள்: இதுவும் சிநேகிதரே.

காசி:—என்ன சங்கதி பாரும்.

[ஒரு கிரகஸ்தன் போகிறான்.

நல்ல துவசதாரியே! உன் வரவு நன்மையாகுக:—
ஏமலீலையை நோக்கி] அம்மா, உன் வரவு நல்லதா
குக:—அகாதா, என் உபசாரத்தை யதிகமாகக் காட்டு
கிறேனென்று நீ பொறுமையுறாதே; இவ்வளவு துணி
கரமாக நான் மரியாதைகாட்டுவதற்கு என் நல்லொழுக்
கமே ஆதாரம்.

[ஏமலீலையின் கையை முத்தமிடுகிறான்.]

அகா:—ஐயா, அடிக்கடி யென்னிடம் அவள் தன்
நாவைக் காட்டுமளவு உம்மிடம் தன் கையைக்
காட்டினால், உமக்கே போதும் போது மென்றாய்
விடும்.

திசை:—ஐயோ பாவம்! அவள் வாயாடுகிறதே யில்லையே.

அகா:—உண்மையில், மட்டுக்குமிஞ்சியேபேச்சு; எனக்
குத் தூக்கம் வரும்பொழுதெல்லாம் நானதைத்
அறிகிறேன். ஆனால்தங்களெதிரே, அவள்நாவைச்
சிறிது உள்ளே அடக்கிக்கொண்டு, மனத்துக்குள்
மட்டும் என்னைத் திட்டுகிறாள் என்பது உண்மை
தான்.

ஏம:—அப்படி நீங்கள் என்னைச் சொல்லக் காரணமே
யில்லை.

அகா:—போதும், போதும்; நீங்களெல்லாம் வெளியே
வந்தால் சித்திரப் பதுமைகளே; வீட்டு முன்கட்
டில் வெண்கலமணிகள்; சமையல் அறையில்
காட்டுப் பூனைகளே. ஏதேனும் தீங்கிழைக்கும்
பொழுது பரம சாதுக்களாகவே தோற்றம்;

கோபம் வந்துவிட்டாலோ பைசாசங்கள் தாம்.

**திசை:**—அடா பழிகாரா! சிறிதும் வெட்கமில்லையா!

**அகா:**—இல்லை, இது மெய்யே; இல்லாவிட்டால் நான் ஒரு அராபியனே.

**ஏம:**—என் புகழை நீங்கள் எழுதவேண்டாம்.

**அகா:**—வேண்டாம், என்னை யெழுதச்சொல்லாதே.

**திசை:**—நீர் என்ன சொல்கிறீர், காசியபரே? மகா தூஷணையாகவும் மானவீனமாகவும் பேசவில்லையா இவன்?

**காசி:**—அம்மா! இவன் தன் மனத்துக்குத் தோன்றி யுள்ளபடி பேசுகிறான்; இவன் கலைஞானத்திலும் யுக்த சாமர்த்தியம் தங்களுக்கு மனோரம்மியமா யிருக்கும்.

**அகா:**—[தனக்குள்] அவன் அவள் அருகேபோகிறான்: சரி, நன்றாயிற்று; 'கிசுகிசென'ப்பேசு: இவ்வளவு சிறிய வலையைக்கொண்டே அவ்வளவு பெரிய பூச்சியாகிய காசிபனைப் பிடித்துவிடுகிறேன். சரி, அவளுடன் சிரி, சிரி; உன் உபசாரங்களைக் கொண்டே உன் கால்களில் தளையிட்டு விடுகிறேன். நீ சொல்வது மெய்யே: அஃது அப்படித்தான்; சரி தான்: இவைபோன்ற உன் நடக்கைகளைக் கொண்டே உன் உபசேனாதிபத்தியத்தை நான் பிடுங்கிவிட்ட பின்பு, அவளுக்கு மரியாதையாக இவ்வளவு அடிக்கடி சிரித்து, சரசமாய்ப் பேசாம லிருந்தோமில்லையே என்று உனக்கே தோன்றும்.

[தாரை முழக்கம் கேட்கிறது.]

அதோ சிங்களவர்! அவர் எக்காளத்தொனி எனக்குத் தெரியும்.

காசி:—அது மெய்யே.

திசை:—நாம் எதிர்கொண்டுசென்று வரவேற்போம்.

காசி:—அதோ வருகிறார், பாருங்கள்!

[உதயலனும் ஏவலரும் வருகிறார்கள்.]

உத:—ஓ! என் அழகிய வீரா!

திசை:—பிராணநாதா!

[இருவரும் தழுவிக்கொள்ளுதல்.]

உத:—எனக்குமுன் நீ இங்கு வந்திருப்பதைக்காண, எனக்கு விசேஷ திருப்தியும் ஆச்சரியமும் உண்டாகின்றது; ஓ, என் ஆத்மாநந்தமே! ஒவ்வொரு சண்டமாருதத்துக்குப் பின்னும் இம்மாதிரியான மனநிறைவும் அமைதியும் நேரிடுமாயின், மாண்டவர் மீண்டெழும் வரையும் வேண்டுமெனினும், காற்றுக்கள் வீசட்டும்; தத்தளிக்கும் மரக்கலங்கள் இமயமலைபோலோங்கிய அலைகளின் மேலேறி விண்ணுலகுக்கும் நரகத்துக்கும் இடையிலுள்ள அளவு தாழ்ந்து அமிழட்டும்! இந்தத் தறுவாயில் மரணம் சம்பவித்தால் அதுவே பெரும்பாக்கியம்; ஏனெனில், இப்பொழுது சம்பூர்ண ஆநந்தத்தில் மூழ்கியிருக்கும் என் ஆத்மாவுக்கு, இதைப் போன்ற சௌபாக்கியம் இனிவரும் அறிவரிய நாட்களில் ஒருபொழுதுங் கிட்டாதென்றஞ்சுகிறேன்.

திசை:—நம் காலஞ் செல்லச்செல்ல, நமது காதலும் பாக்கியங்களும் வளர்ந்தேறுவதன்றி, மற்றொன்றும் நிகழாது தெய்வம் காக்கட்டும்.

உத:—இனிய தேவதைகாள்! அவள் பிரார்த்தனையை ஆசிர்வதியுங்கள்! எனக்குள்ள மனமகிழ்ச்சியைப் பற்றிப் பேசித்திருப்தியாகாது; மட்டுக்கு மிஞ்சிய சந்தோஷத்தால், இங்கு தடையுண்டு நாவெழவில்லை. இதுவும், இதுவுமே [அவளை முத்தமிட்டுக் கொண்டு.] நமக்குள் நேரிடும்பெரும் பிணக்குக்களா யிருக்கட்டும்.

அகா:—[தனக்குள்] ஓ! இப்பொழுது நன்றாய் இசைந்திருக்கிறீர்கள்; ஆயினும்,நான் அகாதனானால்,இவ்விதமான இனியசுருதியைத் தரும் பிரடைகளை நெகிழ்த்தி விடுகிறேன்.

உத:—வா, நாம் கோட்டைக்குச் செல்வோம்:-சிநேகிதர்களே, சமாசாரங் கேளுங்கள்! நம் யுத்தங்கள் முடிந்துவிட்டன; அராபியர்கள் மூழ்கி மடிந்து போனார்கள். இத்தீவிலுள்ள என் பழைய நேசர்களெல்லாம் சுகமாயிருக்கிறீர்களா?—தேனே! செப்பறையில் எல்லாரும் உன்மேற் பிரியமாயிருப்பார்கள்; நான் அவர்களிடத்தில் மிக்க அன்பைப் பெற்றிருக்கிறேன். ஓ.என் கரும்பே! நான் ஏறுமாறாகப் பிதற்றி, எனக்குரிய சௌக்கியங்களைப்பற்றியே எண்ணுகிறேன்.-நல்ல அகாதா, தயைசெய்து கடற்கரைக்குச்சென்று,என் சாமான்களை யெய்லா மிறக்கு. கப்பல் தலைவனைக் கோட்டைக்கு அழைத்துவா; அவன் நல்ல சமர்த்தன்; அவன் யோக்கியதைக்கு ஏற்க அதிக மரியாதை செய்யவேண்டும்.—வா, திசைமோகினி, இங்கு மறுபடியுங் கூடியது வெகு நன்றாயிற்று.

[உதயலனும், திசைமோகினியும், பரிசனங்களும் போகிறார்கள்.]

அகா:—இப்பொழுதே என்னைத் துறைமுகத்தில் வந்து சந்தி: இங்கே வா, நான் சொல்வதைக் கவனித்துக் கேள்: இன்றிரவு உபசேனுபதி காவற் கூடத்தில் காவலிருப்பான்:-ஆனல், முதலில் உனக்கிது சொல்லவேண்டும்—திசைமோகினி அவன்மேல் கனமோகமா யிருக்கிருள்.

இர:—அவன் மேலா! என்ன, அது நடக்கக் கூடியதில்லையே.

அகா:—கப், சிப் என்று வாயைமூடிக்கொண்டு, நான் சொல்வதைக் கவனித்துக்கேள்:வீண்டம்பம்பேசி மனத்துக்குத் தோன்றியபடி புளுகின புளுகுகளை நம்பி, அவள், முதலில் சிங்களவன்மேல் எவ்வளவு சுவபாவவிரோதமாக மோகங்கொண்டாள் என்பதைக் கவனி: வீண்பிதற்றலுக்காக இன்னும் அவன்மேல் ஆசையாகவே யிருப்பாளா? புத்திசாலியாகிய நீ, அப்படி எண்ணுதே. அவள் கண்களுக்குப் போஷணைவேண்டும்; பிசாசைபபார்த்துக்கொண்டிருப்பதில் அவளுக்கென்ன நேத்திரானந்தம் உண்டாகக்கூடும்?

இர:—அவள் விஷயத்தில் நானப்படி நம்பவேமாட்டேன். அவள் உத்தமமான சத்துவக்களஞ்சியம்.

அகா:—சத்துவத்தெருப்புழுதி! அவளும் நம்மைப்போல் உண்டு வாழ்பவள் தானே? அவளிடம் சத்துவகுணமிருந்தால், ஒருபொழுதும் சிங்களவனைக் காதலித்திருக்கவே மாட்டாள். சத்துவக்கொழுக்கட்டை! அவள் காபசினைப்பார்த்துச் சிரித்ததை நீ பார்க்கவில்லையா? அதைக் கவனிக்கவில்லையா நீ?

இர:—ஆமாம், பார்த்தேன்; அது சும்மா, பேச்சுப் போக்கிலே.

அகா:—விடத்தனமென்று வலக்கை போடுகிறேன்; கெட்ட எண்ணங்களும் நடத்தையும் இப்படித்தான் ஆரம்பம். ஆனால், அப்பா, என் சொற்படி நட: நான் உன்னைக்கொற்கையிலிருந்து அழைத்து வந்திருக்கிறேன். நீ இன்றிரவு காவலிரு; அதற்கு வேண்டிய உத்தரவு நானுனக்குக் கொடுக்கிறேன்; காசிபன் உன்னை அறியான்:—நான் உன் கிட்டவே இருக்கிறேன்:—ஏதாவது சத்தம் போட்டுப் பேசியோ, அல்லது அவன் அதிகார முறையைப் பழித்தோ, அல்லது சமயத்துக்குத்தக்கபடி வேறு எவ்விதமாயோ, நீ காசிபனைக் கோபமூட்டு.

இர,—அப்புறம் ?

அகா:—அப்பா, அவன் மூர்க்கன், வெகு முற்கோபி. ஒரு வேளை உன்னையடிப்பான்: அப்படியவன் செய்யும்படி கோபமூட்டு; ஏனெனின், அதைக் கொண்டே இந்தச் செப்பறை வாசிகள் மீறிக் கலகஞ் செய்யும்படி பண்ணிவிடுகிறேன்; ஆகவே, உண்மையாக அவர்கள் மனஸ்தாபந்தீரக் காசிபனை வேலையைவிட்டு நீக்க வேண்டியதாய்விடும்.

இர:—ஏதாயினும் பிரயோசனமுண்டானல் நானிவ் வண்ணஞ் செய்கிறேன்,

அகா:—அதற்கு நான் உத்தரவாதி. சற்றுப் பொறுத்து வந்து கோட்டையில் என்னைச்சந்தி: நான் போய் அவன் சாமான்களைக் கரைக்குக் கொண்டுவர வேண்டும். போய்வா.

இ:—போய்வருகிறேன்.

[போகிறான்.]

அகா:—[தன்மொழி] காசிபனுக்கு அவள்மேல் மோக முண்டென்று நான் நன்று நம்புகிறேன்; அவள் அவனை யிச்சிப்பதும், பொருத்தமாயும் மிக நம்பத் தக்கதாயுமே யிருக்கிறது. சிங்களவன்,—எனக்கு அவனை நினைக்கச் சிறிதும் பொறுக்கமுடியவில்லை யாயினும்—திடசித்தமுள்ளவன், வாஞ்சையுள்ள வன், உத்தமசீலன்; அவன் திசைமோகினிக்கு மிக வுரிமையுள்ள நாயகனுகவே நடந்து கொள்வான். சரி, எனக்கும் அவள்மேல் மோகந்தான்; அடங் காக்காமவெறிகொள்ளாவிடினும்,—அவ்வளவு அச டனில்லையென்று நினைக்கிறேன்—நான சிங்கள வனைச் சந்தேகிக்கிறபடியால், பழிவாங்க வேண்டு மென்ற எண்ணம் தூண்டுகின்றது: அதை நினைக் கும் பொழுது, பாஷாணம் உண்டாற்போல என் வயிறு பற்றியெரிகின்றது; பெண்சாதிக்குப்பெண் சாதி கைப்பற்றி அவன்மேல்பழிவாங்கும்வரையும் என்மனம் திருப்தியடையாது, நான் அதைத் திருப்தியடையவும் விடேன். அல்லது, அது முடியாவிட்டாலும், எந்த ஆலோசனையாலும் நீங் காத சம்சயத்தைச் சிங்களவனுக்கு அவன் மனைவி விஷயத்தில் உண்டாக்கினுல்தான் என்னெஞ்சு ஆறுதலடையும். அதைச் செய்வதற்கு,—திசை மோகினிமேல் காமங்கொண்டு வேட்டைநாய்ப் பாய்ச்சலாக நிற்கும் இந்த இரட்டையன், நான் ஏவினபடி கேளவினுல், பின்பு நம்முடைய மிகு வேல் காசிபனை இஷ்டப்படி யாட்டிவைக்கலாம்.

சிங்களவனிடத்தில் அவனைப்பற்றிய பச்சை பச்சையாய்க் கோள் சொல்ல வேண்டும்:-ஏனெனின், காசிபனும் என் பெண்சாதியைக் கைவைத்திருக்கிறானென்று நான் சந்தேகிக்கிறேன்; ஆகவே, தன்னை ஒரு முழுக்கமுழுதையாக்கிப் பைத்தியம் பிடிக்கும் அளவு தன் மனவமைதியைக் குலைத்ததற்காகச் சிங்களவன் எனக்கு வந்தனமளித்து, பக்ஷம் பாராட்டி, வெகுமானமும் கொடுக்கும்படி செய்வேன். எல்லாம் இங்கேயிருக்கிறது: ஆனால் இப்பொழுது சிறிது குழப்பமாக இருக்கிறது; நடத்தும் பொழுதுதான் வஞ்சனையின் சூதுகள் வெளிப்படையாக முற்றிலும் தெரியவரும்.

[போகிறான்.]

---

### இரண்டாம் காட்சி.

செப்பறை அரண்மனையில் ஒருகூடம்—முன்னிரவு. [உதயலனும், திசைமோகினியும், காசிபனும், ஏவலாளரும்வருகிறார்கள்.]

உத:—மிருவேலா! இன்றிரவு, காவலை நீயே மேற்பார்த்துக்கொள். மட்டுக்கு மிஞ்சாதபடி கவுரவமான மிதபோகமே நாம் நுகரத்தக்கது.

காசி:—செய்ய வேண்டியதெல்லாம் அகாதனுக்குச் சொல்லியிருக்கிறேன்; ஆயினும், நானே நேரில் மேற்பார்க்கிறேன்.

உத:—அகாதன் நல்லயோக்கியன். மிருவேலா! இவ்விரவு உனக்கு நன்றாகுக! நாளை எழுந்தவுடன் என்னை வந்து பார். யாவர்க்கும் நல்லிரவாகட்டும்.

[உதயலனும், இசைமோகினியும், ஏவலாளரும் போகி ருர்கள்; அகாதன் வருகிருன்.]

காசி:—அகாதா, நல்ல சமயத்தில் வந்தாய்; நாம் காவற் கூடத்துக்குப் போகவேண்டும்.

அகா:—அதற்குள் என்ன, உபசேனுபதி! இன்னும் மணி பத்துக்கூட ஆகவில்லையே. நமது இசை மோகினிமேலுள்ள ஆசையால், சேனுபதி நம்மை இவ்வளவு சீக்கிரம் அனுப்பிவிட்டார்; அவர்மேல் குற்றமில்லை.

காசி:—அவள் உத்தமமான சீமாட்டி.

அகா:—அவள் கண்களின் அழகை யென்ன சொல்ல! மன்மதககலத்துக் கழைப்பதுபோல் தோன்று கின்றன!

காசி:—வசீகரமான நோக்கமே; ஆயினும், தக்க நாணம் பொருந்தியிருக்கின்றது.

அகா:—வாய் திறந்துவிட்டாலோ, அவள் குரல் மன்ம தனை யழைக்கும் முரசுபோலிருக்கின்றதன்ரே?

காசி:—மெய்யாகவே, அவள் சர்வபரிபூரணியே.

அகா:—சரி, அவர்கள் சேர்க்கை மங்களமாகட்டும்! வாரும், உபசேனுபதி, என்னிடம் ஒருஜாடி சாரா யம் இருக்கிறது; கரிய சிங்களவரின் மணவிழா வைக் கொண்டாட விரும்பும் செப்பறை விடலை களிருவர் இதோ வெளியே யிருக்கிருர்கள்.

காசி:—இன்றிரவு வேண்டாம், அகாதா. குடித்தால் வெகு சீக்கிரத்தில் மூளை கலங்கிவிடும் துர்ப்பாக் கியன் நான்: குடிப்பதாலன்றி, விழாவயர வே ெறுரு வழக்கம் ஏற்படுமாயின், நன்ருயிருக்கும்.

அகா:—ஓ! அவர்கள் நம் சிநேகிதர்கள்; ஒரேயொரு கிண்ணிதான்; உமக்காக நான் குடிக்கிறேன்.

காசி:—இன்றிரவு நான் ஒரேயொரு கிண்ணிதான் குடித்திருக்கிறேன்; அதுவும்கூடப் பிறரறியாமல் தண்ணீர்விட்டுப்பெருக்கியதே; அப்படியிருந்தும், இங்கே, அது என்னை புரட்டுப்புரட்டுகிறது பார்! இவ்விஷயத்தில் பலக்குறைவு என் துர்ப்பாக்கியமே; ஆகவே, என் பலவீனத்தை யின்னுமதிகமாகச் சிரமப்படுத்தலாகாது.

அகா:—என்னப்பா! இது விருந்தாடிக் களிக்கும் இரவில்லையா? அந்த விடலைகளும் அதிக ஆவலாயிருக்கிறார்கள்.

காசி:—அவர்களெங்கே?

அகா:—அதோ வாசலி லிருக்கிறார்கள்; தயைசெய்து உள்ளே கூப்பிடும்.

காசி:—ஆகட்டும்; ஆனால், இது எனக்கு பிடிக்கவில்லை.
[வெளியே போகிறான்.]

அகா:—[தனிமொழி.] இன்றிரவு இதற்கு முன் குடித்திருப்பது தவிர, இன்னும் ஒரே கிண்ணி குடிக்கும்படி செய்து விட்டேனானால், அவன் ஒரு யௌவன சீமாட்டியின் செல்வமாய் வளர்க்கப்பட்ட நாயைப்போல், எதற்கும் கோபமுறவும் சண்டைசெய்யவும் தொடங்கி விடுவான். இப்பொழுது, காமவிரக நோயால் கால் தலை தெரியாமல் திரியும் மூடனாகிய இரட்டையன், திசைமோகினியின் க்ஷேமத்தைப் பிரார்த்தித்து, இன்றிரவு குடங்குடமாய்க் குடித்திருக்கிறான்; அவனும் காவ

லிருக்கப்போகிறான்; செப்பறை இளைஞர்களில் மூவர்,—தற்செருக்கு மதம் பிடித்த அகந்தையாளர், தங்கள் மானத்தை யொருவரும் எதிர்த்து அணுகாது ஜாக்கிரதையாய்க் காப்பவர், போர்ப் பிரியமுள்ள இத்தீவில் நீரும் நெருப்பும்போற் படபடப்புள்ளவர்,—அவர்களையும் நிரம்பக் குடிக்கச் செய்து கலக்கி வைத்திருக்கின்றேன்; அவர்களும் காவலிருக்கப்போகிறார்கள். இப்பொழுது, இந்தக் குடிகாரமந்தைக்குள், இத்தீவிலுள்ளார் கோபமுறும்படியான ஏதாவதொன்று செய்யும்படி, நம்முடைய காசிபனை விடப்போகிறேன்:—இதோ அவர்கள் வருகிறார்கள். பின்விளைவு, என்சூழ்ச்சிசரியானதென்று காட்டிவிட்டால், காற்றிலும் நீரோட்டத்திலும் என் ஓடம் தடையின்றிச் செல்லும்.

[காசிபன் திரும்பிவருகிறான்; அவனுடன் மந்தானனனும் கிரகஸ்தரும் வருகிறார்கள்; வேலைக்காரர் சாராயத்துடன் பின்னே வருகிறார்கள்.]

காசி:—சத்தியமாகவே, இதற்குள்ளேயே என்னை நன்கு குடிக்கும்படி இவர்கள் செய்து விட்டார்கள்.

மந்:—உண்மையில், மிகக் கொஞ்சமே: நான் யுத்த வீரனென்பது மெய்யெனில், ஆழாக்குக்கு மேலிராது.

அகா:—ஓ! கொஞ்சம் சாராயம்!

[பாடுகிறான்.]

‘வாழ்வாவது மாயம்; இது மண்ணாவது திண்ணம்;
பாழ்போகுவர் படைவீரரும்; பருகீர் மதுக் கிண்ணம்;
தாழாதினித் தளராதுயர் சாராயமே தாரும்,
ஏழேழுலகெங்கும் இதற்கிணையேயிலை பாரும்’

அடே பயல்களா, சிறிது சாராயம்!

காசி:—ஈசனுணே, இது பேஷான பாட்டு!

அகா:—இதை நான் சோழ தேசத்திலே கற்றுக் கொண்டேன்; அங்கேதான் குடியில் அதிவல்லவர் கள் இருக்கிறார்கள்; உங்கள் பாண்டிநாட்டார், உங் கள்மலையாளத்தார், உங்கள் தொப்பை பெருத்த தொண்டைமண்டலத்தார், இவர்களெல்லாம்,-குடி யுங்களவோடோ—சோழதேசத்தாருக்கு உறையிட வும் காணமாட்டார்கள்.

காசி:—உங்கள் சோழநாட்டான் குடிக்கிறதில்அவ்வளவு சமர்த்தனு?

அகா:—என்னபோம்! உங்கள்பாண்டிநாட்டான் பிணம் போல் கீழே விழும்வரையும் அவன் வெகு சுளு வாய்க் குடிக்கிறுன்; உங்கள் கொங்குநாட்டானைக் குடியில் தூக்கி யெறிந்து ஜயங்கொள்வதில், அவ னுக்கு வியர்க்கிறது கூடவில்லை; ஒரே குவளையில் உங்கள் தொண்டைமண்டலத்தானை எக்களித்து வாந்தியெடுக்கும்படி செய்துவிடுகிறுன்.

காசி:—நம் சேனுபதிக்கு மங்களமுண்டாகுக!

மங்:—உபசேனுபதி, எனக்கு அது பிரியமே: நானும் அதற்காக உம்முடன் குடிக்கிறேன்.

அகா:—ஓ! இனிய சோழதேசமே!

[பாடுகிறுன்.]

'சோழன் மகராசன் தனவானே:—அவன்
சோமன் விலையும் ஒரு வராகன் தானே;
அதிலும் ஒருகால் அதிகம்—என்றே,
மதியிலி என்று மந்திரியை வைதானே;

புசிப்போன் அப்பூபதி தானே;—நீயோ
இகழும் நிலையில் இருப்பவன் தானே;
கர்வமே நாட்டைக் கெடுக்கும்:—அப்பால்,
கழித்துள கந்தலைக் கட்டிக்கொள் போடா.'

ஓ; கொஞ்சம் சாராயம்!

காசி:—என்ன, இது முன்னதினும் வெகு நேர்த்தியான பாட்டாயிருக்கிறதே.

அகா:—திரும்பவும் பாடுகிறேன், கேட்கிறீரா?

காசி:-வேண்டாம். ஏனெனில் அந்தமாதிரியான சங்கதிகள் செய்பவன், தன் அந்தஸ்துக்குத் தக்கவனில்லையென்பது என் கொள்கை. சரி, எல்லாருக்கும் மேல் ஒரு கடவுளிருக்கிறார்; அன்றியும், சில ஆத்மாக்கள் மோக்ஷமடையும் சில, ஆத்மாக்கள் மோக்ஷமடைய மாட்டா.

அகா:—நல்ல உபசேனபதி, அது வாஸ்தவந்தான்

காசி:—என் மட்டிலே,-சேனபதிக்காவது வேறு எந்தப் பிரபுவுக்காவது அவமரியாதையாக நான் சொல்ல வரவில்லை,—நான் மோக்ஷமடைவேனென்று நம்புகிறேன்.

அகா:—நானும் அப்படியே, உபசேனபதி.

காசி:—ஆம், ஆனால், எனக்கு முன் நீ மோக்ஷமடைய முடியாதென்று ஒப்புக்கொள்ள வேண்டும்; துவஜதாரிக்கு முந்தி உபசேனபதி ரக்ஷிக்கப்படுவான். இந்தப் பேச்செல்லாம் போதும்; நாம் நம்முடைய வேலையிற் புகுவோம். சுவாமீ! தண்டம். கனவான்களே, நான் குடிவெறியா யிருக்கிறேனென்று எண்ணாதேயுங்கள்; இவன்தான் என் துவஜதாரி

இது என் வலதுகை, இது என் இடதுகை;—
எனக்கிப்பொழுது குடிவெறியில்லை; நான் நன்றாய்
நிற்கவும்கூடும்; நன்றாய்ப் பேசவுங்கூடும்.

எல்லாரும்:—வெகு நன்றாகவே.

காசி:—பின்னையென்ன? மிகவும் சரி; பின்னை, நீங்கள்,
நான் குடிவெறியிலிருக்கிறேனென்று எண்ணவுங்
கூடாது.

[வெளியே போகிறான்.]

மங்:—எல்லாரும் தட்டுமேட்டுக்குப் போவோம் வாருங்
கள்; காவல் நியமிப்போம்.

அகா:— இதோ, முன்னால் போனானே, இந்தப் பயலைப்
பாருங்கள்: சுக்ரீவன் பக்கத்தில் நின்று (அவனுக்
கிணையாக) அதிகாரஞ் செய்யவல்ல யுத்த வீரன்
அவன்; அவன் துர்க்குணத்தையும் பாருங்கள்,
அவன் நற்குணத்துக்கு நேர் சமமாய், அஃது எவ்வ
ளவு பெரிதோ அவ்வளவு பெரிதாயிருக்கின்றது;
அஃது அவன் விஷயத்தில் பரிதபிக்கத்தக்கதே.
உதயலர் அவனிடத்தில் வைத்திருக்கும் நம்பிக்
கையினிமித்தம், அவன் துர்க்குணம் துலங்கும்
யாதானும் ஒரு சந்தர்ப்பத்தில், இந்தத் தீவு கலங்கி
விடுமென்று அஞ்சுகிறேன்.

மங்:—ஆனால், அவன் இப்படி அடிக்கடியிருக்கிறதுண்டா?

அகா:—எப்பொழுதுமே, அவன் நித்திரை போகுமுன்
இது நடந்து தீரும். குடியினால் அவன் தொட்டில்
ஆட்டப்படாவிட்டால், இராப்பகல் விழித்துக்
கொண்டேயிருப்பான்.

மங்:—ஆனால், இதைச் சேனாபதிக்கு ஞாபகப்படுத்துவது
நலமாயிருக்கும். ஒருவேளை அவருக்கிது தெரியாம

லிருக்கும்; அல்லது அவர் தம் நற்குணத்தால், காசிபனிடத்திற் காணப்படும் நன்மையையே மதித்து, அவன் குற்றங்களைப் பாராமலிருக்கலாம்: இஃது உண்மையில்லையா?

[இரட்டையன் வருகிறான்.]

அகா:—[அவனிடத்தில் தனிமையாக] என்ன, இப்பொழுது, இரட்டையா! தயை செய்து, போ உபசேனாபதியை விடாதே.

[இரட்டையன் வெளியே போகிறான்.]

மந்:—இவ்வாறு வேரூன்றிய துர்க்குணத்தையுடைய ஒருவனை, அதிசீலராகிய சிங்களவர் தமக்கு நேராக அடுத்த ஸ்தானத்தில் வைத்துப் பார்ப்பது மிகவும் விசனப்படத்தக்கதே. சிங்களவரிடத்தில் இதைச் சொல்வதே யோக்கியம்.

அகா:—இவ்வழகிய தீவு முழுமையுங் கிடைக்கிறதாயிருப்பினும், நான் சொல்லமாட்டேன்; காசிபன் மேல் எனக்குப் பக்ஷமதிகம்; என்ன செய்தாயினும் அவனிடமுள்ள இத்தீக்குணத்தை நிவர்த்திக்கவே பார்ப்பேன்—ஆனால், உற்றுக்கேளுங்கள்! என்ன சத்தம் அது? [உட்புறமாகக் கூக்குரல்] "ஐயோ! ஐயோ!"

[இரட்டையனைத் துரத்திக்கொண்டு காசிபன் திரும்பி வருகிறான்.]

காசி:—அயோக்கியப்பயலே! போக்கிலிப்பயலே!

மந்:—என்ன சங்கதி, உபசேனாபதி?

காசி:—ஒரு திருட்டுப்பயல்!—என் கடமை யெனக்குக் கற்பிக்கிறதா! அந்தத் திருட்டுப் பயல் உடம்பு

மலார்க் கூடைபோலாகும் வரையும் அடிக்கிறேன் அவனை.

இர:—அடிப்பையா என்னை!

காசி:—பிதற்றுகிறாயா, அயோக்கியப்பயலே?

[இரட்டையனை அடிக்கிறான்.]

மந்:—[அவனைத்தடுத்து] வேண்டாம், நல்ல உபசேனாபதி; ஐயா, தயைசெய்யும், அடியாதேயும்.

காசி:—விடும், ஐயா; என்னை; இல்லாவிட்டால் உம் தவடையைப் பேர்த்துவிடுவேன்.

மந்:—போதும், நிறுத்தும். நீர் குடிவெறியாயிருக்கிறீர்.

காசி:—குடிவெறியா!

[அவர்கள் சண்டையிடுகிறார்கள்.]

அகா:—[இரட்டையனிடத்தில் தனிமையாக] ஓடிப்போ, என்கிறேனே, வெளியேபோய்க் கலகமென்று கூக்குரலிடு.

[இரட்டையன் வெளியே போகிறான்.]

வேண்டாம், நல்ல உபசேனாபதி,—ஐயோ! கனவான்களே:—விலக்குங்கள், ஓ!—உபசேனாபதி—ஐயா,— மந்தானனரே,—ஐயா,—எல்லாரும் விலக்குங்கள்;—இங்கே காவல் வெகு நன்றாயிருக்கிறது!

[மணி குலுக்கப்படுகிறது.]

யார் மணியைக் கிலுக்குகிறார்கள்? ஐயோ நாசமே! பட்டணங் கிளம்பிவிடுமே: உபசேனாபதி, கடவுள் மேலாணை, நிறுத்தும்; நீர் தீராத அவமானத்தையடைவீர்.

[உதயலனும், ஏவலரும் திரும்பவும் வருகிறார்கள்.

**உத:**—என்ன, என்ன இம்சை! எதிலிருந்து இம்சை உண்டாயிற்று? அராபியர் நமக்குச் செய்யாது கடவுள் தடுத்ததை நாமே யொருவருக்கொருவர் செய்ய, நாம் அராபியராகிவிட்டோமா? ஹிந்துக்களுக்குரிய மானத்தை நினைத்து, இந்தக் காட்டுத்தனமான சச்சரவை நிறுத்துங்கள்: தன் கோபத்தையே பாராட்டி, இனிவெட்டுக்கத்தியை ஓங்குபவன், தன் உயிரை அற்பமாக யெண்ணினவனாவான்; அவனைக் தால் கொன்று விடுவேன்.—அந்தப் பயங்கரமான மணிமுழக்கத்தைநிறுத்து; இந்தத்தீவை யொழுங்கு பிறழும்படி, அது பயமுறுத்துகின்றது.— ஐயன்மீர்! என்ன விசேஷம்? விசனத்தால் இறந்தவனைப்போலக்காணும் நாணயமுள்ள அகாதா! சொல், யார் இதைத் தொடங்கினார்கள்? என் விசுவாசத்தின் மேலாணை.

**அகா:**—எனக்குத் தெரியாது, சற்றுமுன், இப்பொழுதுதான், காவலிடத்தில் சிநேகமாயிருந்தார்கள்; படுக்கைக்குப் போகும் புதுப்பெண்ணும் மாப்பிள்ளையும்போல் பிரியமாயிருந்தார்கள்: பின்பு, உடனே, ஏதோ கிரகசாரத்தால் மதிமயங்கினாற்போல, வாளையுருவுகிறதும், கொடும் பகையோடு ஒருவர் நெஞ்சில் ஒருவர் குத்துகிறதுமாய் விட்டது. இந்த அசங்கியமான சச்சரவுக்கு யாது ஆரம்பமென்று என்னாற் சொல்ல முடியவில்லை; இதிற் கலக்கும்படி என்னை யிங்கே கொண்டு வந்துவிட்ட என் கால்களை, கீர்த்திபெற்ற யுத்தகளத்தில் இழந்திருந்தேனில்லையே என்று வருந்துகிறேன்.

உத:—மிருவேலா! நீ இவ்வாறு தன்னை மறந்து நடந்த தென்ன?

காசி:—தயை செய்து மன்னியுங்கள், என்னால் பேச முடியவில்லை.

உத:—மந்தானனரே! நீர் நல்ல யோக்கியரும் மரியா தைக்காரருமாயிற்றே; உம் இளம்பிராயத்தின் பெருந்தன்மையையும் சாந்தத்தையும் உலகம் அறிந்து, மஹாமேதாவிகளும் உம் பெயரைச் சிறந்ததாக மதிக்கின்றனரே; அங்ஙனமிருக்க, உம் கீர்த்தியை நீர் இவ்வாறு சீர்குலைத்து, நீரடைந் திருக்கும் சிறந்த நற்பெயரை யழித்து, இராக் காலத்தில் சச்சரவு செய்து திரிவோனென்ற பெயருறும்படி, நீரொழுகும் விதம் என்ன? என் கேள்விக்குப் பதிலுரையும்

மந்:—உதயலர் மஹானே, நான் பிராணபாயமான காய மடைந்திருக்கிறேன்: தங்கள் உத்தியோகஸ்தர் அகாதரே எனக்குத் தெரிந்ததை யெல்லாம் சொல்லக்கூடும்; பேசினால் எனக்குச் சிறிது இப் பொழுது நோகிறது; தவிரவும், தற்காப்புச் சில வேளைகளில் துர்க்குணமாயும், மூர்க்கர்களெதிர்த் துத் தாக்கியபொழுது தன்னைக் காத்துக் கொள்ளு தல் பாவமாயுமிருந்தாலன்றி, நான் இன்றிரவு தவறுதலாக ஒன்றும் பேசவுமில்லை, செய்யவு மில்லை

உத:—கடவுளாணை, இப்பொழுது, எனக்கும் நிதான வமைதியும் பதபாகமுங் குன்றிக் கோபங் கிளர் கின்றது. விவேகத்தின் முகத்திற் கரியைத்தீற்றி மங்கச்செய்துவிட்டு, தாபம் தானே வழிகாட்ட

முயல்கின்றது. யான் ஒருக்கால் கிளம்பினல், அல்லது இக்கையைமட்டுந் தூக்கினல், உங்களுட் சிறந்தவனும் என் தண்டனைக்கீழ் ஆழ்வீர்கள். இந்தப் பாழான சச்சரவு எங்ஙனமுண்டாயிற்று? யார் முதலில் தொடங்கினர்களென்று எனக்குச் சொல்லுங்கள்; இக்குற்றம் எவன்மேல் ருசுவாகிறதோ, அவன் ஒரே பிறப்பில் என்னுடன் இரட்டையாகப பிறந்தவனேயாயினும், யான் அவனை உதறித் தள்ளிவிடுவேன்.—என்ன! யுத்த சந்தமாயும், இன்னும் குழப்பமாயுமுள்ள பட்டணத்தில், குடிகள் மனமெல்லாம் இன்னும் பயந்ததும்பி வழிந்து கொண்டிருக்கையிலே, இராக்காலத்திலே, காவற்கூடத்திலேயே, ஒருவருக்கொருவருள்ள சொந்த மனஸ்தாபங்களையும் வீட்டுச் சண்டைகளையும் நடத்துகிறதா! இது பெருங் குற்றமே! அகாதா, இதைத்தொடங்கியவர் யார்?

மாந்:—நட்புக்காகவேனும், உடன் உத்தியோகஸ்தனென்றெண்ணியேனும், பக்ஷபாதமாக, உண்மையைக் கூட்டிக் குறைத்துக்கூறின், நீர்யுத்த வீரரல்ல.

மகா:—அப்படி நெருங்காதேயும்: மிகுவேல் காசிபருக்குத் தீங்கிழைப்பதினும், இந்த நாவை அறுத்துவிடுவதே எனக்கிஷ்டம்; ஆயினும், உண்மையையுரைப்பதில் அவருக்கொரு தீங்கும் விளையாதென்றே நம்புகிறேன்.—சேனபதி! நடந்தவாறு இது தான்: நானும் மந்தானனரும் பேசிக்கொண்டிருக்கையில், அபயக் கூக்குர லிட்டுக்கொண்டு ஒரு பயல் ஓடி வந்தான்; அவனைத் தீர்த்துவிடத்

துணிந்து, கம்பியுங் கையுமாய்க் காசிபரும் தொட ர்ந்து வந்தார். ஐயா, இந்தக்கிரகஸ்தர், காசிபர் முன்சென்று, பொறுத்துக்கொள்ளும்படி அவரை வேண்டினர்: இப்பொழுது நிகழ்ந்துவிட்டபடி, அவன் கூக்குரலால் பட்டணந் திகிலடையா வண் ணம், பெருங்கூச்சலிடும் அந்தப் பயலை நான் தொடர்ந்து சென்றேன்; வேகமாய் ஓடுபவனுகை யால், அவன், என்னெண்ணம் நிறைவேறுதபடி தப்பியோடிவிட்டான்; கத்திகள் உரசிச் சப்திப் பதையும், ஒன்றின்மேலொன்று விழுவதையும், காசிபர் கோபமாய் வைவதையுஞ் செவிக்கொண்டு நான் விரைவில் திரும்பி வந்தேன்; இன்றிரவுக்கு முன் காசிபர் அவ்விதம் திட்டுவதை நான் கேட் டதேயில்லை. நான் திரும்பிவரும்பொழுது,—எல் லாம் வெகு சீக்கிரத்தில்தான்—அவர்கள் நெருங் கிக் கலந்து, குத்தும் அடியுமாயிருந்தார்கள்; தாங் கள் மறுபடியும் விலக்கும்பொழுது எவ்வாறிருந் தார்களோ அப்படியே தான். இதைத்தவிர நான் சொல்லக்கூடிய தொன்றுமில்லை:—ஆனால், மனிதர்கள் மனிதர்களே: சர்வோத்தமர்களும் சில வேளைகளில் தங்களை மறந்துவிடுகிருர்கள்:— கோபவசப்பட்டவர்கள், தங்களுக்கு நன்மையை மிகச் சூழ்பவர்களையே யடித்து விடுவதுபோல, காசிபர் அவனுக்கு ஏதோ சிறிது தீங்கு செய்தா லும், ஓடிப்போனவன், பொறுக்கரிய அவமரி யாதை யாதோ செய்து, காசிபரைக் கோபமூட்டி யிருப்பானென்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்.

உத:—அகாதா, எனக்குத் தெரியும்; உன் நற்குணத்

தாலும், காசிபன்மேலுள்ளபக்ஷத்தாலும், இந்தச் சங்கதியைச் சிறிது இலேசாக்கி, அவன்மேல் அதிகக்குற்றஞ் சுமத்தாமற் சொல்லுகிறாய். காசிபா, உன் மேலெனக்குப் பிரியமே; ஆனால் இனியொரு பொழுதும் நீ என் உத்தியோகஸ்தனா யிருக்க வேண்டாம்.

[திசைமோகினி, சில ஏவலருடன் திரும்பி வருகிறாள்.]

பார், என் இனிய காதலி எழுந்து வந்து விட்டாள்!

[காசிபனை நோக்கி]

காசிபா! உன்னை ஒரு உதாரணமாக்குவேன்.

[திசைமோகினியை நோக்கி]

என் கரும்பே! எல்லாம் இப்பொழுது சரியாய் விட்டது.

[மந்தானனை நோக்கி]

ஐயா, எமது காயங்களுக்கு யானே சிகிச்சை செய்கிறேன்.

அவரை அழைத்துப்போங்கள்.

[ஏவலர் மந்தானனை நடத்திச் செல்லுகிறார்கள்.]

அகாதா! பட்டணத்தைக் கவலையாய்ச் சுற்றிப் பார்; இந்தக் கெட்ட சச்சரவால் கலக்க முற்றவர்களை யெல்லாஞ் சமாதானப்படுத்து.—வா, திசைமோகினி, தங்கள் இனியநித்திரையினின்றும் கலகங்களால் எழுப்பப்படுவது, யுத்தவீரர் வாழ்க்கைக்குரியதே.

[அகாதனையும் காசிபனையும் தவிர, மற்றுயாவரும் வெளியே போகிறார்கள்.]

அகா:—என்ன! உமக்குக் காயமுண்டா உபசேனபதி?

காசி:—ஆம், எந்த ரணவைத்தியத்தாலும் ஆற்றமுடியாது.

அகா;—ஐயோ! கடவுள் விலக்கட்டும்!

காசி:—நற்பெயர்! நற்பெயர்! நற்பெயர்! ஓ என் நற்பெயரை யிழந்துவிட்டேனே! என்னில் அழியாப் பகுதியை யிழந்துவிட்டேன்; எஞ்சி யிருப்பது மிருகத்தன்மையதே.—என் நற்பெயர், அகாதா, என் நற்பெயர்!

அகா:—உண்மையாகச் சொல்லுகிறேன், உம்முடைய உடம்பிலெங்காவது காயமுண்டென்றே நினைத்தேன்; நற்பெயரினும் அதே சேதமுறக்கூடியது. நற்பெயரென்பது, ஒரு வீணான, முழுப் பொய்யான மேல்வேஷமே; அடிக்கடி, யோக்கியதை யில்லாமலே வருகிறது, தக்க காரணமின்றியே போய்விடுகிறது: அதையிழந்தவராக நீரே பெயர் வைத்துக்கொண்டாலன்றி, நீர் ஒரு நற்பெயரை யுமே யிழக்கவில்லை. ஏன்காணும்! சேனைபதியின் பிரியத்தைத் திரும்பி யடைய வழிகளிருக்கின்றன: நீர்போய்த் திரும்பவும் வேண்டிக்கொண்டால், உம்மவராய்விடுவார்.

காசி:—அவ்வளவு நல்ல சேனைபதியை, இவ்வளவு அற்பமான, குடிவெறிகொண்ட, அஜாக்கிரதையுள்ள சேவகனையிருந்து ஏமாற்றுகிறதா! சீ! என்ன அவமானம்எனக்கிது! குடிவெறி கொள்கிறது? வாய்க்கு வந்தபடி யுளறுகிறது? கலகஞ் செய்கிறது? வீம்பு பேசுகிறது? வசை கூறுகிறது? தன்னிழலுடனேயே தாறுமாறாய் வாதாடுகிறது?—ஓ! சாராயத்தின் கண்ணுக்குப்புலப்படாத ஆவியே! உனக்கு வேறு பெயரில்லையெனின், உன்னைப் பிசாசென்றழைக்கலாம்!

அகா:—நீர் கத்தியுங்கையுமாய்ப் பின்றொடர்ந்தவன் யாவன்? அவனுமக்கு என்னசெய்தான்?

காசி:—நானறியேன்.

அகா:—மெய்தானுவிது?

காசி:—எத்தனையோ சங்கதிகள் ஞாபகமிருக்கின்றன, ஆனுலொன்றும் தெளிவாயில்லை; ஒரு சண்டை நடந்தது, ஆனுல் அதன் காரணமொன்றுந் தெரிய வில்லை. அந்தோ! தங்கள் மூளைகளைத் திருடிச் செல்லும்படி மனிதர்கள் தங்கள் வாய்களில் ஒரு பகைவனை விட்டுக்கொள்கிருர்களே! சந்தோஷத் துடனும், மகிழ்ச்சியுடனும், விழாவயர்ச்சியுடனும் புகழ்ச்சியுடனும், நாம் நம்மை மிருகங்களாக்கிக் கொள்கின்றேமே!

அகா:—என்ன, இப்பொழுதெல்லாம் சரியாயிருக்கி றீரே. இப்படி யெவ்வாறு சரியாய்விட்டீர்?

காசி:—குடிவெறிப் பிசாசு தயைகூர்ந்து கோபப் பிசா சுக் கிடங்கொடுத்திருக்கிறது. நானே என்னை உண்மையில் வெறுக்கும்படி, ஒருகுறை மற்ருெரு குறையை வெளியிடுகிறது.

அகா:—போதும், நீர் நீதி கூறுவது மிகக் கண்டிப்பா யிருக்கிறது: காலம், இடம், தேசநிலைமை இவற் றை யுத்தேசித்து, இவ்வாறு நிகழாமலிருந்தால் மிகவும் நலமென்றெண்ணுகிறேன்; ஆனுல், நடந் தது நடந்தாய் விட்டபடியால், அதை உமக்கு நன்மை பயக்கும்படி திருத்திக்கொள்ளும்.

காசி:—என் உத்தியோகத்தைத் திரும்பக் கொடு மென்று அவரிடம் போய்க் கேட்கிறேன்; நீ

குடிகாரனென்று அவர் பதில் சொல்லட்டும்! ஆதிசேஷனத்தனை நாவுகள் எனக்கிருப்பினும், அந்த மறுமொழி யெல்லாவற்றையும் ஒடுக்கி விடும். இப்பொழுதொரு புத்திசாலியாயிருக் கிறது, சற்றுப் பொறுத்து ஒரு மூடன் ஆகிறது, உடனே ஒரு மிருகமாய்விடுகிறது! ஓ என்ன புதுமை! மட்டுக்கு மிஞ்சிய ஒவ்வொரு கிண்ணியும் சாபத்திடே; அதன் உட்சாரக்குப் பிசாசே.

அகா:—போதும், போதும்; நல்ல சாராயம் சரியா யுபயோகித்தால், ஒரு நல்ல பழகத்தக்க வஸ்துவே; இன்னும் அதைப் பழிக்க வேண்டாம். இதிருக்க: நல்ல உபசேனுபதி! என்னை உம்மேற் பக்ஷமுள்ள வனுக மதிக்கிறீரென்று எண்ணுகிறேன்.

காசி:-அதை நான் நன்கறிவேன், ஐயா; நான் குடிவெறி கொண்டேனு!

அகா:—என்ன ஐயா, நீரில்லே, வேறெந்த மனிதனும் தானென்ன, சிலவேளை குடித்திருக்கக்கூடும். நீர் செய்ய வேண்டியதைச் சொல்கிறேன், கேளும். நமதுசேனுபதியின் மனையாட்டிதான் இப்பொழுது சேனுதிபதியா யிருக்கிறுள். அவள் குணுதிசயங் களையும் அழகுகளையும் தெரிந்து கவனித்துத் தியானஞ் செய்யும்பொருட்டே, அவர் தம்மை அர்ப்பணஞ் செய்துவிட்டபடியால், நானிப்படிச் சொல்லுதல் பொருந்தும். அவளிடத்தில் ஒளிப்பின்றி யாவற்றையுஞ் சொல்லிவிடும்; அவளை அலட்டி வேண்டிக்கொள்ளும்; உமது ஸ்தா னத்தில் உம்மைத் திரும்பவும் வைக்க அவளுதவி செய்வாள். ஒருவர் தன்னை வேண்டியதினும்

அதிகமாக உதவிபுரியாமை, தன நற்குணத்துக்குக் குறைவென் றெண்ணுமளவு, அவள் மனவுதார மும், தயையும், நற்குணமும் பொருந்தியவள்.

காசி:—நீ தக்க யுக்தியே சொல்லுகிறாய்.

அகா:—சத்தியமாகவே, உண்மையான பக்ஷத்தாலும் நல்லெண்ணத்தோடுமே நான் பேசுகிறேன்.

காசி:—நானும் அதைச் சரியாகவே நினைக்கிறேன்; அதி காலையிற் சென்று, கற்பரசியாகிய திசைமோகினி யை எனக்காகவேண்டிப் பேசும்படி பிரார்த்திப் பேன். இவ்வளவிலேயே தடைப்பட்டுப்போனால், என்கதி யென்னகு மென்று மிகவும் ஏக்கமாயிருக் கிறது.

அகா:—நீர் சொல்வது சரிதான். உமக்கு நல்லிரவாகுக, உபசேனபதி; நான் காவலுக்குச் செல்லவேண்டும்.

காசி:—நாணயமான அகாதா, நல்லிரவாகுக.

[போகிறான்.]

அகா:—(தனிமொழி) ஆகவே, யான் செய்வது அயோக் கியத்தனமென்று சொல்கிறவன் எவன்? இந்த ஆலோசனை, உண்மையாகவே நல்லெண்ணமுடை யார் உரைக்கத்தக்கதாயும், யோக்கியமானதாயும், யுத்திபுத்திக்குப் பொருந்தினதாயும் இருக்கிறது; நானும் அதைச் சொல்லிக்கொடுக்கிறேன்; சிங்கள வன் பிரியத்தைத் திரும்பப் பெறுதற்கு வழியும் இதுவே. ஆகவே, அவன் நன்மைக்கு நேர்வழி யாகிய இந்த யுத்தியைக் காசிபனுக்குப் போதிப்ப தில், நான் எவ்வாறு துரோகியாகிறேன்? ஆ! இது துரோகத்தின் வேதாகமம்! தீய ஊழ்வினை,

அதிகொடூரமான பாதகங்களைத் தூண்டும்பொழுது, நான் இப்பொழுது செய்வதுபோல், தெய்வீகமான புண்ணியத்தோற்றங்களை முதலிற் காட்டி, மனத்தைக் கவர்கின்றது: எங்ஙனமெனின், இந்த நாணயமான மூடன், தன் துர்ப்பாக்கியங்களைச் சீராக்கும்படி திசைமோகினியையகலட்டி வேண்ட, அவள் அவனுக்காகச் சிங்களவனிடத்தில் பலமாய்ச் சிபார்சு செய்கையில், தன் தூர்த்த வியாபாரத்தின் பொருட்டே அவனை வேலையில் திரும்பவுமிருத்த வேண்டுகிறாளென்ற விஷத்தை, நான் சிங்களவன் காதிலூற்றுவேன்; ஆகவே, அவள் அவனுக்கு நன்மை செய்ய எவ்வளவு மன்றுடுகின்றனளோ, அவ்வளவு, சிங்களவன் தன் மேற்கொண்டிருக்கும் மதிப்பையும் நம்பிக்கையையும் இழப்பாள். இவ்விதமாக, அவள் நற்குணத்தைக் கரியாக்கி, அவள் சத்துவகுணத்தைக் கொண்டே அவர்களனைவரையும் சிக்கச்செய்யும் வலையைப் பின்னிவிடுகிறேன்.

[இரட்டையன் வருகிறான்.]

என்ன சங்கதி, இரட்டையா?

இர:—இந்த வேட்டையில், நான் சத்தத்தை நிரப்பும்படி, கூடக்குரைத்துச் செல்லும் நாயாகவிருக்கிறேனேயன்றி, வேட்டைபிடிக்கும் நாயாகவில்லை. என் பணம் அநேகமாய்ச் செலவாய்விட்டது; இன்றிரவு வெகு நன்றாய்த் தடிக்கம்புப் பூசையுங் கிடைத்தது; முடிவில் என் சிரமத்துக்குப் பிரதிபலன், கிடைத்த அநுபவத்தைத்தவிர வேறிராதென்றெண்ணுகிறேன்; ஆகவே, கையிற் காசேதுமே

யின்றி, முன்னினுஞ் சிறிததிகப்பட்ட விவேகத்தோடு, கொற்கைக்குத் திரும்பிப் போகவேண்டியது தான்.

அகா:—பொறுமையில்லாதார் எத்தனையேழைகள்! காலக்கிரமத்தாலன்றி எந்தக் காயந்தான் ஆறின துண்டு? நாம் மதிகொண்டு வேலை செய்கின்றோமே யன்றி மந்திரங் கொண்டில்லை யென்பது உனக்குத் தெரியுமே; மதியோ மந்தமாகச் செல்லும் காலத்தைப் பொறுத்தது. என்ன, ஒன்றும் செவ்வையாகவில்லையா? காசிபன் உன்னை யடித்தான்: அச்சிறுதீங்கால் நீ காசிபனை விட்டுக்கலைப்பிவிட்டாய். சற்றுப் பொறுத்துக்கொள்.—சத்தியமாகவே, பொழுது விடிந்துவிட்டது. விளையாட்டும் வினையும் காலநிகழ்ச்சியைச் சுருக்கிக் காட்டுகின்றன. படுக்கப்போ; நீ தங்குமிடம் செல்; போ, என்கிறேனே; பிற்பாடு மேற்சங்கதி சொல்லுகிறேன்: நில்லாதே போய்விடு.

[இரட்டையன் போகிறான்.]

இரண்டு காரியங்கள் செய்யவேண்டும்,—என் மனைவி, காசிபனுக்காகத் தன் எஜமானியிடம் சிபார்சு செய்யவேண்டும்; அவளை யதற்குத் தூண்டிவிடுகிறேன்; அது நடக்க, சிங்களவனை நான் வேறாக அழைத்துச் சென்று, காசிபன் அவன் மனைவியை வேண்டிக்கொண்டிருக்குந் தருணத்தில், அவன் காணும்படி கொண்டு விடவேண்டும்:—ஆம் அது தான் வழி: ஆலோசனையை அசட்டுத்தன்மையாலும்ஆலசியத்தாலும் மந்தப்படுத்தலாகாது.

[போகிறான்.]

# மூன்றும் அங்கம்.

## முதல் காட்சி.

*செப்பறையில் அரண்மனையின் முன்னிலை—காலை.*

*[திசைமோகினியும், காசிபனும், ஏமலீலையும் வருகிறார்கள்:]*

திசை:—நற்குணக் காசிபரே, உமக்காக என்னாலியன்றதெல்லாஞ் செய்வேனென்று நிச்சயமாய் வைத்துக்கொள்ளும்.

ஏம:—அம்மணீ செய்யுங்கள். இது தமக்கு நேர்ந்தாற்போல் என் புருஷர் வருந்துகிறாரென்று, உறுதியாகச் சொல்லுவேன்.

திசை:—ஓ, அவன் யோக்கியன். காசிபரே, நீரும் என்னாதரும் முன்போலவே இஷ்டமாயிருக்கும்படி செய்வேனென்பதை நம்பும்.

காசி:—உதாரகுண அம்மணீ, மிகுவேல் காசிபன் கதியென்னவாயினும், அவனெப்பொழுதும் தங்கள் உண்மை யூழியனே யொழிய வேறில்லை.

திசை:—அதையறிவேன்:—உமக்கு வந்தனம். நீர் என்னாதர்மேல் பக்ஷமுள்ளவர்: அவரை வெகுகாலமாயறிவீர்; வெளிப் பார்வைக்குச் சிறிது வேண்டிய அளவுக்குமேல், அவருமமை விலக்காரென்று உறுதியாய் நினையும்.

காசி:—ஆம், அம்மா; ஆனல் வெளிப்பார்வைக்காகச் செய்யும் அந்தப் பாவனை அதிகமாக நீடித்தேனும்

எதிர்பாராத அற்ப சங்கதிகளால் பலப்பட்டே னும், அகஸ்மாத்தாய் அதிகப்பட்டேனும், நான் கண்ணெதிரி லிராமலும், என் ஸ்தானத்தில் வேறொருவனமர்ந்தும், என் தலைவர் என் பக்ஷத் தையும் நான் செய்திருக்கும் ஊழியத்தையும் மற ந்து விடக்கூடும்.

திசை:—அப்படி அஞ்சவேண்டாம்; இதோ ஏமனிலை முன்னிலையில், உம்முடைய உத்தியோகத்தை உமக்குத் திரும்பிக் கொடுப்பதாக நான் வாக்களிக் கிறேன் : நான் நட்புப்பாராட்டிவிட்டால், முடிவு வரையும் அதை நிறைவேற்றுவேனென்று உறுதி யாயெண்ணும் : என் நாதரை யிடையறாது அலட் டுவேன்; அவர் படியும் வரையும் தூங்கவிடாது, பொறுக்க முடியாமல் இணங்கும் வரையும் வாதாடு வேன்; அவர் சயனக் கிரகத்திலும் உண்ணும் பொழுதுங்கூட, விடாது அலட்டுவேன் ; அவர் செய்கைகள் ஒவ்வொன்றிலும், காசிபரின் முறை யீட்டைக் கலப்பேன்: ஆகையால், காசிபரே, நீர் சந்தோஷமாயிரும். உம்முடைய வக்கீல் உம் முடைய கட்சியை யிழப்பதினும், தான் சாகவே னுஞ் செய்வாள்.

ஏம:—அம்மா, இதோ எஜமானர் வருகிறார்.

காசி:—அம்மா, நான் விடைபெற்றுக் கொள்கிறேன்.

திசை:—ஏன், நான் பேசுவதை யிருந்து கேளும்.

காசி:—அம்மா, இப்பொழுது வேண்டாம்; எனக்கு மனம் சரியாயில்லை ; என் காரியானுகூலத்துக்கு நானிப்பொழுது ஏற்ற நிலைமையிலில்லை.

**திசை:**—நல்லது, உம்முடைய யுக்தம் போற் செய்யும்.

[காசிபன் வெளியே போகிருன்.]

[உதயலனும், அகாதனும் வருகிருர்கள்.]

**அகா:**—ஆ! அது நன்றுயில்லேயே.

**உத:**—என்ன சொல்கிருய்?

**அகா:**—ஒன்றுமில்லே, ப்ரபோ; ஏதோ,—இன்னதென்று தெரியவில்லே.

**உத:**—காசிபனல்லவா, அதோ என்மனேவியை விட்டுப் பிரிந்து சென்றவன்?

**அகா:**—ப்ரபோ! இல்லே; நிச்சயமாகவே, தாங்கள் வருவதைக் கண்டு, கள்ளன்போல் இம்மாதிரியாக, அவர் நழுவுவாரென்று எனக்குத் தோற்றவில்லே.

**உத:**—அவனென்றே யெண்ணுகிறேன்.

**திசை:**—என்ன, பிராணநாதா! தங்கள் அப்பிரியத்தால் மனம் வாடும் ஒரு மனுதாரரோடு இங்கே பேசிக்கொண்டிருந்தேன்.

**உத:**—யாரைச் சொல்கிருய்?

**திசை:**—ஏன், தங்கள் உபசேனபதி காசிபரையே. பிராணநாதா! தங்களுக்கு என்மேல் கிருபையிருப்பின், இப்பொழுதே அவர் சமாதானத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்; ஏனெனின், யோக்கியதையை முகக்குறிகளினல் மதித்தறியும் சக்தி யெனக்கிருப்பது மெய்யானல், அவர் தங்கள்மேல் அந்தரங்க வாஞ்சையுள்ளவரென்பதும், அறியாமையாலன்றித் தெரிந்திருந்தும் பிழை செய்பவரில்லேயென்பதும் நிச்சயமே: அவரைத் திரும்ப அழைக்க வேண்டுகிறேன்.

உத:—அவனிப்பொழுது இங்கிருந்து போயினனா?

திசை:—ஆமாம்; அரைடைந்த மனச் சிறுமையினால், யானும் அவருடன் மனம் வருந்தும்படி, தம் துய ரத்திலொரு பகுதி, இங்கு விட்டுப்போனார். என் இனிய காதலரே! அவரைத் திரும்பவழையுங்கள்.

உத:—இப்பொழுது வேண்டாம், திசைமோகினி; வேறொரு சமயமாகட்டும்.

திசை:—ஆனால், சீக்கிரத்திலாகுமோ?

உத:—என்கரும்பே, உனக்காகச் சீக்கிரத்தில் செய் கிறேன்.

திசை:—இன்றிரவு போஜன காலத்திலாகட்டுமோ?

உத:- இல்லை, இன்றிரவு வேண்டாம்.

திசை:—பின்னை, நாளைப்பகல் போஜனகாலத்திலோ?

உத:—நாளை நான் வீட்டிற் சாப்பிடமாட்டேன்; கோட் டையில் தளகர்த்தர்களைச் சந்திக்கவேண்டும்.

திசை:—என்ன, பின்னை, நாளையிரவிலா? அல்லது, செவ் வாய்க்கிழமை காலையிலா; செவ்வாய்க்கிழமை பக லிலா? இரவிலா? புதன்கிழமை காலையிலா?— தயை செய்து காலத்தைக் குறிப்பிடுங்கள்; ஆனால் மூன்று நாட்களுக்கு மேற்போகவேண்டாம். நான் மறுக்கும்படியாவது, அல்லது, இவ்வாறு திகைத் துத் தியங்கும்படியாவது, நீங்கள் என்னிடம் எதைக் கேட்கக்கூடுமென் றெண்ணி ஆச்சரியப் படுகிறேன். என்ன, தாங்கள் என் [illegible]ழைந்து வந்தபொழுது தங்களுடன் வந்த மி[illegible]ல் காசி பர், தங்களைப்பற்றி எத்தனையோ தடவை நான் குறைவாகப் பேசிய காலங்களில், தங்கள்கட்சியை

எடுத்துப் பேசியவர், அவரைத் திரும்பக் கொண்டுவர இவ்வளவு பாடா! பொய்யில்லை, நானெனின்,—

உத:—போதும், தயைசெய்து நிறுத்து; அவனுக்கிஷ்டமானபோது வரட்டும்; உனக்கொன்றுமே மறுக்கேன்—அதற்குப் பதிலாக, நான் சிறிது நேரம் தனித்திருக்கும்படி, நீ செல்ல வேண்டுகிறேன்.

திசை:—நான் மாட்டேனென்று சொல்லட்டுமா? வேண்டாம்: போய்வருகிறேன், நாதரே.

உத:—போய் வா, திசைமோகினி: இதோ நேராக உன்னிடம் வருகிறேன்.

திசை:—வா, ஏமலீலா;—தங்களிஷ்டம் போலிருங்கள்; தாங்களெப்படியிருப்பினும், நான் சொற்படி நடப்பவளே.

[ஏமலீலையுடன் வெளியே போகிறாள்.]

உத:—பேஷான குட்டி! உன்னை உண்மையில் இல்லாவிட்டால், என் ஆத்மா நரகத்திலாழட்டும்! தவிரவும், உன்னை யொழிந்தபின் உலகமெல்லாம் பாழ்ங் குழப்பமே.

அகா:—கௌரவப்ரபோ—

உத:—என்ன சொல்கிறாய், அகாதா?

அகா:—தாங்கள் எஜமானியை வேட்டுச் சென்றபொழுது, மிருகவேல் காசிபருக்குத் தங்கள் காதல் விஷயம் தெரியுமோ?

உத:—அவனுக்கு ஆதியோடந்தம் தெரியும்; என்னத்திற்காகக் கேட்கிறாய்?

அகா:—ஏதோ, என் மனத்திருப்திக்கே; வேறு கெடுதல் ஒன்றுமில்லை.

உத:—மனத்திருப்திக்கென்றாயே, அதேன், அகாரா?

அகா:—அம்மையவர்களை அவருக்குத் தெரியுமென்று நானெண்ணவில்லை.

உத:-ஓ, நன்றாய்த் தெரியும்; அடிக்கடி எங்களிடையே தூது சென்றிருக்கிறான்.

அகா:—அப்படியா!

உத: -அப்படியா! ஆம்! அப்படித்தான்: அதில் ஏதாவது விசேஷம் தட்டுப்படுகிறதா உனக்கு? அவன் யோக்கியனில்லையா?

அகா:—யோக்கியதையா, ப்ரபோ!

உத:—யோக்கியதை, ஆம், யோக்கியதையே?

அகா:—ப்ரபோ, எனக்குத் தெரிந்தமட்டிலும் (யோக்கியரே).

உத:—நீ என்ன நினைக்கிறாய்?

அகா:—நினைக்கிறதா, ப்ரபோ!

உத:—'நினைக்கிறதா, ப்ரபோ!' கடவுளாணை, வெளிக்காட்டத் தகாத குரூபமான கொடிய எண்ணம் ஏதோ மனத்திலிருப்பதுபோல், நான் சொல்வதை எதிரொலிக்கிறான்.—உன் நடக்கை ஏதோ விசேஷத்தைக் குறிக்கிறது. இப்பொழுதுதான், காசிபன் என் மனைவியைவிட்டுப் போனபொழுது, 'அது நன்றாயில்லை' யென்று நீ சொன்னது காதில் விழுந்தது; எது நன்றாயில்லை? என் காதல் வேட்கை நிகழ்ச்சியில் நடந்த யாவற்றிலும், அவன் எனக்கு உட்கையா யிருந்தானென்று

சொன்னபொழுது, "அப்படியா!" என்று ஆச்சரியப்பட்டு, ஏதோ மிகக் கொடிய சந்தேகத்தை உன் மூளையில் அடக்கி வைத்திருக்கிறாய்போல, உன் புருவங்களை நெரித்துச் சுருக்கிறாய்: உனக்கென் மேல் பக்ஷமுண்டானால், உன் நினைவை என்னிடம் வெளியிடு.

அகா:—ப்ரபோ! நான் தங்கள்மேல் அந்தரங்க விசுவாசமுள்ளவனென்பது தங்களுக்கே தெரியும்.

உத:—நான் அப்படியே எண்ணுகிறேன்; அதுவுமன்றி, நீ மெய்யன்பும் யோக்கியதையும் நிறைந்தவனென்றும், வாய் திறக்குமுன் வார்த்தைகளை நிறுத்துப் பார்த்துப் பின்பே பேசுகிறவனென்றும் எனக்குத் தெரியும்; ஆகையினால்தான், இவ்விதமாக நீ தியங்குவது எனக்கு அதிக பயத்தையுண்டாக்குகின்றது: ஒரு பொய்யனான வஞ்சகனிடத்தில், இம்மாதிரியான நடக்கைகள் வழக்கத்தால் ஏற்பட்ட புரட்டுக்களாகும்; ஆனால், ஒரு யோக்கியனிடத்திலோ, ஆக்கிரகமடங்காது பொங்கும் மனத்திலிருந்து தாமாகவே வெளிவரும் மறைவான குற்றச்சாட்டுக்களாம்.

அகா:—மிகுவேல் காசியர் விஷயத்தில், சத்தியமாகவே, அவர், யோக்கியரென்றே படுகிறது.

உத:—நானும் அப்படியே எண்ணுகிறேன்.

அகா:—வெளித் தோற்றம்போலவே மனிதர் உண்மையிலு மிருக்கவேண்டும்; அப்படியில்லாதார், ஒரு விதமாகவும் தோற்றுதிருத்தலே நலம்.

**உத:**—நிச்சயமாகவே, மனிதர் வெளிக்குத் தோற்று வது போலத்தான் உண்மையிலும் இருத்தல் வேண்டும்.

**அகா:**—பின்னை என்ன, காசிபர் யோக்கிய ரென்றே தோற்றுகிறது.

**உத:**—இல்லை, இதில் இன்னும் ஏதோ விசேஷமிருக்கி றது: சற்று உன் நினைவுகளை உள்ளபடி விவரமாய்ச் சொல்; எவ்வளவு கெட்ட எண்ணங்களாயிருப்பி னும், எவ்வளவு கெட்ட மொழிகளில் வேண்டுமா யினும், வெளியிடு.

**அகா:**—ப்ரபோ, மன்னியுங்கள்: என் கடமைக்குரிய எதைச் செய்யவும் நான் கட்டுப்பட்டவனாயினும், சகல அடிமைகளுங்கூடச் சுதந்திரமாய் அநுபவிக் கும் விஷயத்தில், நான் கட்டுப்பட்டவனல்ல. என் நினைவுகளையா கூறவேண்டும்? ஏன், அவை கெட்ட வை, பொய்யானவை என்றே வைத்துக்கொள் வோம்:—கெட்ட வஸ்துக்கள் சில சமயங்களில் உட்புகாத, அவ்வளவு பரிசுத்தமான அரமனை எங் கிருக்கின்றது? கிரமமான சித்த விருத்திகளுடன் துன்மார்க்கமான சில சந்தேகங்களும் கலந்திராத, அவ்வளவு பரிசுத்தமான இருதயம் எவனுக்குண்டு?

**உத:**—அகாதா, உன் சிநேகிதனுக்கு ஒரு தீங்கு செய் யப் பட்டிருப்பதாக நினைத்தும் உன் மனத்திலிருப் பதை அவனுக்கு நீ சொல்லாவிட்டால், நீயும் கூடித் தீங்கிழைப்பவனே யாகிறாய்.

**அகா:**—நான் தங்களை வேண்டிக்கொள்கிறேன்.—இல் லாத குற்றங்களை யிருப்பனவாக என் சமுசய

குணம் உருப்படுத்துவதும், கெடுதிகளையே உற்று நோக்கிக் கண்டுபிடிப்பதும், எல்லைப் பிடிக்கும் துர்க்குணம் என்பது எனக்குத் தெரியும்; ஆகவே, என் சந்தேகம் ஒரு வேளை கெட்டவிதமாயிருப்பினும், நிதான விவேகமுள்ள தாங்கள், அதைப் பொருட்டாகவெண்ணி, இவ்வளவு அரைகுறையான ஆலோசனையையுடைய நான் நிச்சயமாகவும் தீர்மானமாகவுமின்றிக் கண்டனவற்றி லிருந்து, தங்களுக்கொரு வருத்தத்தைத் தாங்கள் உண்டு பண்ணிக்கொள்ள வேண்டாம். தங்கள் மன நிறைவுக்கேனும், நன்மைக்கேனும், என் ஆண்மைக்கேனும், யோக்கியதைக்கேனும், விவேகத்துக்கேனும், என் நினைவுகளைத் தங்களுக்குத் தெரியப் படுத்துவது தகுதியன்று.

**உத:**—உன் கருத்தென்ன?

**அகா:**—என் பக்ஷமுள்ள ப்ரபோ! புருஷருக்கும் ஸ்திரீகளுக்கும் நற்பெயரே முக்கியமான ஆத்ம பூஷணம்: ஒரு பணப்பையைத் திருடுகிறவன் ஒரு துரும்பையே திருடுகிறான்; அஃது அற்பமானது, ஒன்றுமேயில்லை; என்னுடையதாயிருந்தது, அவனதாயிருக்கிறது, அதேவிதமாக எத்தனையோ ஆயிரம்பேர்களுக்கு அடிமையா யிருந்திருக்கிறது; ஆனால், என் நற்பெயரைத் திருடுகிறவனோ, தன் செல்வத்தையும் அதிகப்படுத்தாது, என்னையும் வெறும் ஏழையாக்கி விடுகிறான்.

**உத:**—சுவாமி சத்தியமாக, உன் எண்ணங்களை அறிந்தே தீருவேன்.

அகா:—என் இருதயம் தங்கள் கையிலிருந்தாலுமே அது முடியாதே; அப்போது என் வசமிருக்க, நான் ஒரு பொழுதும் இணங்கேன்.

உத:—ஹா!

அகா:—ஐயோ! ப்ரபோ! சமுசயத்துக்கிடங்கொடாதே யுங்கள்; தனக்கிடங்கொடுத்துத் தன்னைப் போஷிப் பவர்களைப் புதிது புதிதான பொய்த் தோற்றங் களால் மயக்கிப் பழி வாங்கும் பைசாசம் அது. தன் மனைவியின் வியபிசாரத்தை உறுதியாயறிந்து, அவள் மேற் காதலே யில்லாத வன் இன்பமாகவே வாழ்கிறான்; ஆனால், பெருங் காதலுடன் சமுசயத்தையும், சந்தேகத்துடன் பல மான ஆசையையும் உடையவனோ, ஒவ்வொரு நிமி ஷத்திலும், அந்தோ! என்ன நரகவேதனைக்குள் ளாகிறான்!

உத:—ஐயோ, கொடுந்துன்பம்!

அகா:—எளியவனுக்குத் திருப்தியிருந்தால், அவன் தன வானோ, போதுமான செல்வமுள்ளவனே; ஆனால் அளவு கடந்த செல்வமிருந்தும், ஏழையாய்விடலா மென்ற பயம் எப்பொழுது மிருந்தால், அவன் வெறும் ஏழையே;—என் இனத்தார் ஒருவருமே சமுசயகுணமுறாதபடி கடவுள் கிருபை செய்து காக்க!

உத:—ஏன், ஏனிப்படி? புதிய புதிய சந்தேகங்களுடன், கலைமாறுஞ் சந்திரனைப்போல், நானும் மாறிமாறிச் சமுசயத்திலேயே என் வாழ்நாளைக் கழிப்பே னென்று எண்ணுகின்றனையா நீ? இல்லை; சமுசய

முற்ருல், உடனே யுண்மையறிந்து தெளிவுறு
வேன்; நீ ஆலோசிக்கிறபடி, தோற்றியவாறெல்
லாம், வெறுஞ்சமுசயங்களை என் ஆத்மார்த்தமான
வேலையாக்கிக் கொண்டால், நீ, என்னை ஒரு
ஆடு என்றே மதிக்கலாம். என் மனைவி அழகாயிருக்
கிருள், நன்ருய்ச் சாப்பிடுகிருள், பலருடன் பழக
விரும்புகிருள், சாதுரியமாய்ப் பேசுகிருள், நன்ரு
ய்ப் பாடுகிருள், வாத்தியம் வாசிக்கிருள், நிர்த்தன
ஞ்செய்கிருள், என்று சொல்வதெல்லாம் சமு
சயத்தை யுண்டு பண்ணுது; கற்பிருக்குமிடத்தில்
இவையெல்லாம் மேலான நற்குணங்களே: அன்
றியும், என் யோக்கியதைகள் சொற்பமானவை
யென்பதை நினைந்து, நான் அணுவளவு பயத்தை
யாவது, அவள் வரம்புகடந்து நடப்பாளென்ற
சமுசயத்தையாவது, அடையமாட்டேன்; ஏனெ
னின், அவள் தன் கண்களாற் பார்த்தே என்னை
விரும்பிக்கொண்டாள். இல்லை, அகாதா, நான் பார்
த்தே சமுசயமுறுவேன்; சமுசயமுற்ருல் பரீக்ஷை
பார்ப்பேன்; பின்பு, ருஜுவின்பேரில், ஒரே துணிவு
தான்,—காதலோ அல்லது சமுசயமோ, உடனே
ஒழிய வேண்டியதே.

அகா :—எனக்கிது சந்தோஷமே: ஏனெனின், தங்கள்
மேலுள்ள விசுவாசத்தையும், என் கடமையையும்,
இப்போது ஒளிப்பின்றிக்காட்டலாம்; ஆதலின்
என் கடமையைச் செலுத்துகிறேன்; தாங்கள்
இதைக்கேளுங்கள் :—நான் ருஜுவைப்பற்றி அத
ற்குட் பேசவில்லை. தங்கள் மனைவியாரைக் கவனியுங்
கள்; காசிபாரிடம் அவர்கள் நடந்துகொள்வதை உற்

றுப்பாருங்கள்; தங்கள் நோக்கம் இப்படியிருக்கட்டும்: சமுசயமும் வேண்டாம், திடமான நம்பிக்கையும் வேண்டாம்: தங்கள் நிஷ்களங்கமான பெருந்தன்மை, கபடமற்ற தங்கள் உதார குணத்தினுலேயே கேடுறுவது எனக்குச் சம்மதமில்லை; நன்று கவனியுங்கள்: எங்கள் தேசகுணம் எனக்கு நன்றாய்த் தெரியும்; கொற்கை நகரத்துப் பெண்பிள்ளைகள் கடவுளறிய எவ்வளவோ தூர் விளையாட்டுக்கள் விளையாடுவதுண்டு: தங்கள் புருஷர் காணுது மறைப்பதுமட்டுமே ஒரு கவலை; அவர்கள் சிறந்த மனச்சாக்ஷியெல்லாம், வெளிக்குத் தெரியாது மறைக்கவேண்டுமென்பதே தவிர, செய்யலாகாதென்பதல்ல.

**உத**—அப்படியா சொல்கிருய்?

**அகா:**—தங்களை மணம்புரிவதில் தன் தகப்பனையே அவர்கள் வஞ்சித்தார்கள்; தங்கள் ரூபத்தைக் கண்டு பயந்து நடுங்குவதுபோல் நடிக்கும்பொழுதே, அவர்கள் அதை மிகவும் காதலித்தார்கள்.

**உத:**—ஆம், அப்படியே செய்தாள்.

**அகா:**—பின்னை யென்ன, பாருங்கள்: இவ்வளவு இளமையிலேயே, தன் தகப்பனை மந்திரவாதமென்றெண்ணும்படி, சுவர் வைத்தாற்போல் அவர் கண்ணைமுழுதும் மறைத்து, மேலுக்கு நடிக்க வல்லவள்,—ஆனல், இதெல்லாம் நான் சொல்வது சரியல்ல; தங்கள்மேலுள்ள மிக்க வாஞ்சையாற் பேசியதை, தயைசெய்து பொறுத்தருளப் பிரார்த்திக்கிறேன்.

**உத:**—என் வாழ்நாள் முழுதும் நானுனைக்குக் கடமைப் பட்டவனே.

**அகா:**—இது தங்கள் மனவுற்சாகத்தைச் சிறிது கலக்கி விட்டதாகத் தோற்றுகிறதே.

**உத:**—துளிகூடவில்லை; துளிகூடவில்லை.

**அகா:**—மெய்யாகவே, அப்படிக் கலக்கிவிட்டதென்றே அஞ்சுகிறேன். நான் பேசியதை, தங்கள் மேலுள்ள பக்ஷத்தைப்பொறுத்ததாகக் கொள்வீர்க ளென்று நம்புகிறேன்;—ஆனல், இது தங்கள் மனத்தை யிளக்கிவிட்டதாகவே தெரிகிறது;— நான் சொன்ன வார்த்தைகளால் சமுயப்பட்ட தோடு மட்டுமின்று கொன்னும்படிக்கும், அதற்கு மேல் விசேஷமாக ஏதாவது கற்பித்துப் பிரமாத மாக்காதபடிக்கும் நான் தங்களைப் பிரார்த்துத்துக் கொள்ள வேண்டும்,

**உத:**—அப்படிச் செய்யமாட்டேன்.

**அகா:**—ப்ரபோ, தாங்கள் அப்படிச் செய்து விட்டால், நான் சிறிதும் கருதாத தீப்பயனை என் பேச்சு விளைவிக்கும். காசிபர் என் உற்ற நண்பர்:—ப்ர போ, தாங்கள் மனந் தியங்குகிறீர்களே.

**உத:**—இல்லை, அதிக வருத்தமில்லை; திசைமோகினி கற் புடையாளென்றே எண்ணுகின்றேன்.

**அகா:**—அவ்வாறே அவர்கள் நீடூழிவாழட்டும்; தாங்க ளும் அவ்வெண்ணத்தோடே நீடூழிவாழ்வீர்களாக!

**உத:**—ஆயினும், முற்றிலும் சுவபாவ விரோதமாக,—

**அகா:**—ஆ, அதுதான் குறி :-தங்களிடம் துணிந் துதான் சொல்கிறேனே,—இயற்கையில் எல்லாப்

பிராணிகளும் இனமறிந்து சேர்வது போலன்றி, ஜநநபூமி, மேனி, அந்தஸ்து, இவையெல்லாம் பொருந்திய பலவரன்களையும் வெறுத்துத்தள்ளி, —சீ! அப்படிப்பட்டவளிடத்தில் அதிவிகாரமான சித்தவிருத்தியும், கேவலம் தாரதம்மியமில்லாமையும், சுவபாவவிரோதமான நினைவுகளு மிருக்குமென்று யூகிக்கலாம்:—ஆனால், என்னை மன்னியுங்கள்; அவள் மனம், பிந்திய சிதான அறிவின் வழிப்பட்டுத் தங்களைத் தன் தேசத்து மற்ற ரூபவான்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து, ஒருவேளை கிலேசமுறக்கூடுமென்று பயப்படக் காரணமிருப்பினும், இப்பொழுது நான் சொன்னதெல்லாம் அவளையே குறிப்பிட்டுப் பேசியதாகக் கொள்ள வேண்டாம்.

**உத:**—சரி, நீ போய்வா; இன்னும் விசேஷமாக ஏதாவது கண்டால் எனக்குத் தெரிவி; குறிப்பாகக் கவனிக்கும்படி, உன் பெண்சாதியை ஏற்படுத்து; நீ போ, அகாதா.

**அகா:**—[போய்க்கொண்டே] ப்ரபோ, விடைபெற்றுக் சொள்கிறேன்.

**உத:**—நான் ஏன் விவாகஞ் செய்துகொண்டேன்?-யோக்கியனான இவன், தான் வெளிப்படுத்துவதை விட எவ்வளவோ அதிகமாகப்பார்த்தும் அறிந்துமிருக்கிறானென்பதிற் சந்தேகமில்லை.

**அகா:**—[திரும்பிவந்து] ப்ரபோ, இந்த விஷயத்தில் தாங்களிதற்குமேல் இன்னும் ஊன்றிப்பார்க்கவேண்டாமென்று பிரார்த்திக்கிறேன்; நாளடைவில் தானே தெரியும்: காசிபரைத்திரும்பவும் உத்தி

யோகத்தில் வைப்பது தகுதியே; ஏனெனில், அவர் வெகுசாமர்த்தியமாய் வேலை பார்க்கிறரென்பது நிச்சயமே: ஆயினும், தாங்கள் மட்டும் அவருக்கு வேலையை யுடனே கொடுக்காது, சிறிது ஆலஸ்யம் செய்யின், அதனல் அவர் நடையையும், அவர் வேலையைத்திரும்பிப் பெறச்செய்யும் உபாயங்களையும், அறிந்துகொள்ளலாம்: அவர் உத்தியோக நியமன விஷயத்தில், தங்கள் மனைவியார் விசேஷ ஆவலுடன் மன்றடுகிறர்களா என்பதைக் கவனியுங்கள்: அதில் நிரம்பவும் அறிந்துகொள்ளலாம். இதன் மத்தியில், போதுமான காரணங்களின்றியே நான் சமுசயப்பட்டதாகவிருக்கட்டும்;—அப்படி ஒருவேளை இருக்கலாமென் றெண்ணவும், தக்க ஏதுவிருக்கிறது,—ஆகவே, தங்கள் மனைவியாரைக் குற்றமற்றவராகவே பாவிக்கத் தங்கள் மேலான கனத்தைப் பிரார்த்திக்கிறேன்.

**உத்:**—என் நடக்கையால் ஏதாவது வெளியாய்விடுமென்று நீ அஞ்சாதே.

**அகா:**—நான் மறுபடியும் விடைபெற்றுக்கொள்கிறேன்.

[போகிறன்.]

**உத்:**—இந்தப் பயல் சத்திய சந்தன்; மனிதர் நடபடிக்கைகளையெல்லாம் அநுபவத்தில் நன்கறிந்தவன். அவள் துர்நடக்கைமட்டும் உறுதியாய்த் தெரிந்துவிட்டால், என்னுயிரே போவதாயிருப்பினும், எக்கேடுகெட்டாலுமே சரியென்று, அவள் ஆசையை உதறிடுவேன். ஒருவேளை, நான் கறுப்பாயிருப்பதனலோ, அல்லது விடபுருஷர்களிடத்திலுள்ள வாக்கு நயமும் சாதுரியமும் என்னிடத்

தில்லாமையினுலோ, அல்லது சிறிது வயது தளர்ந்தவனுயிருத்தலினுலோ,—ஆனல் வயது அவ்வளவு ஆகிவிடவு மில்லை—அவள் கைதவறிவிட்டாள்; என் மானம் அழிந்து விட்டது; இனி எனக்கு அவளை வெறுப்பதைத் தவிர வேறு போக்கில்லை. அந்தோ! இந்த மெல்லியலார்களை நமக்குச் சொந்தமாகப்பாராட்டும் பாத்தியதையை மட்டும் விவாகத்தால் அடைகின்றோமே யன்றி, அவர்கள் ஆசாபாசங்களும் நமக்குரியனவே யென்று, உறுதியாய்க்கூற முடியாமலிருப்பது ஒரு சாபத்தீடே! நான் காதலிக்கும் பொருளில், பிறர் உபயோகங்களுக்காக ஒரு சிறு பாகமும் விட்டிருப்பதினும், பாழறையில் நீராவியையுண்டுவாழும்ஒரு தேரையாகவேனும் இருப்பதே மேல். அதோ, திசைமோகினி வருகிறுள். அவளை மோசஞ்செய்தால்,—பின்பு, இவ்வளவு அழகுள்ள இடத்தில் சீலமில்லால் அவளைச் சிருஷ்டித்த தெய்வம், தன்னைத்தானே பரிகசித்ததாகும். நான் அதை நம்பவே மாட்டேன்.

[திசைமோகினியும் ஏமலீலையும் திரும்பி வருகிறார்கள்.]

திசை:—என்ன, பிராணநாதா! தங்கள் போஜனமும், தங்களால் அழைக்கப்பட்ட இத்தீவினராகிய உயர்குல விருந்தினரும், தங்கள் வரவை நோக்கிக் காத்திருக்கின்றனரே.

உத:—என்மேல் பிசகே.

திசை:—ஏன் இவ்வளவு சடைவாய்ப் பேசுகிறீர்கள்? உடம்பு சரியாயில்லையா?

**உத:**—என் தலை கொஞ்சம் வலிக்கிறது.

**திசை:**—நிச்சயமாகவே, அது கண்விழித்ததனால்தான்; அது மறுபடியும் போய்விடும்: என் கைக்குட்டையால் பலமாய்க் கட்டுகிறேன், ஒருமணி நேரத்துக்குள்ளேயே அது சொஸ்தமாய்விடும்.

**உத:**—உன் தூவாலை மிகச்சிறிது, போதாது;

[அவன் கைக்குட்டையைத் தள்ளுகிறான்; அது கிழே விழுந்துவிடுகிறது.]

அது சும்மாவிருக்கட்டும்; வா, நாம் உள்ளே செல்வோம்.

[உதயலனும், திசைமோகினியும் போகிறார்கள்.]

**ஏம:**—(தனிமொழி) இந்தத்தூவாலையகப்பட்டது எனக்குச் சந்தோஷமே: காதற்சின்னமாக அவளுக்குச் சிங்களவர் முதல் முதல் கொடுத்ததிது: மனமுரண்டுள்ள என் புருஷர், இதைத் திருடித்தரும்படி நூறுதரம் என்னைப்பரிந்து கேட்டிருக்கிறார்; ஆனால் எப்பொழுதும் தவறவிடாது வைத்திருக்கும்படி அவளிடத்திற் பிரமாணம் வாங்கி, அவர் அதைக் கொடுத்திருப்பதனால், அவளுக்கு அதன் மேல் எவ்வளவோ பிரியம்; அதை முத்தமிட்டு அதோடு கொஞ்சிப் பேசும்படி, எப்பொழுதும் அதைத் தன் கையிலேயே வைத்துக்கொண்டிருக்கிறாள். இந்த வேலையைப்போல் ஒரு பிரதிசெய்து கொண்டு, என் புருஷருக்குக் கொடுப்பேன்; அவர் அதை என்ன செய்வாரோ அது சுவாமிக்குத்தான் தெரியும், நானறியேன்; அவர் மனோபீஷ்டத்தைத் திருப்தி செய்யும்பொருட்டே நானிப்படிச் செய்கிறேன்.

[அகாதன் திரும்பி வருகிறான்.]

அகா:—என்ன, இங்கே தனியே என்ன செய்கிறாய்?

ஏம:—அதட்டாதேயுங்கள்: உங்களுக்கு ஒன்று வைத் திருக்கிறேன்.

அகா:—எனக்கு ஒன்று! அது சாதாரணமானதே—

ஏம:—இம்?

அகா:—பெண்டாட்டி முட்டாளாயிருத்தல்.

ஏம:—ஓ, இவ்வளவுதானா! அந்தக் கைக்குட்டையைத் தந்தால் இப்பொழுது எனக்கு என்ன தருவீர்கள்?

அகா:—எந்தக் கைக்குட்டை?

ஏம:—எந்தக் கைக்குட்டையா! ஏன், சிங்களவர் முத லில் திசைமோகினிக்குக் கொடுத்ததே; நீங்கள் எத்தனையோ முறை திருடும்படி சொன்னதே.

அகா:—அவளிடமிருந்து திருடிவிட்டாயா, என்ன?

ஏம:—இல்லை; அவள் அஜாக்கிரதையால் கீழே தவறி விழுந்தது; நானும் அந்தச் சமயத்தில் இங்கிருந் தேன், எடுத்துக்கொண்டேன். இதோ இருக்கி றது, பாருங்கள்.

அகா:—நல்லகுட்டி, கையில் கொடு.

ஏம:—அதைத் திருடிக்கொடுக்கும்படி இவ்வளவு விருப்பமாய்க் கேட்டீர்களே: அதை என்ன செய் யப்போகிறீர்கள்?

அகா:—[அதைப் பிடுங்கிக்கொண்டு] ஏன் அது என்ன வானாலும் உனக்கென்ன?

ஏம:—ஏதாவது முக்கியமான விஷயத்துக்கில்லாவிடின் அதைத் திரும்பத் தந்துவிடுங்கள். ஐயோ பாவம்! அது காணமற்போனது தெரிந்தவுடன், அந்த அம்மாளுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்.

அகா:—நீ அறியாதவள்போலிருந்துவிடு; எனக்கு ஒரு காரியத்துக்கு அது வேண்டியிருக்கிறது. போ, என்கூட இராதே. [வெளியிலே போகிறாள்] (தனிமொழி) காசிபன் கண்டெடுக்கும்படி இந்தக் கைக்குட்டையை அவன் தங்குமிடத்தில் தவறவிடுவேன். காற்றைப்போல் இலேசான அற்ப சங்கதிகளுங்கூட, சமுசயமுற்ற நெஞ்சத்தார்க்கு, வேதவாக்கியப்பிரமாணத்தைப்போல், பலமான ருஜுக்களாகின்றன: இதுவும் ஏதாவது சிறிது செய்யக்கூடும். இதற்குள்ளேயே சிங்களவன் என் விஷத்தால் மனந்திரிகின்றான்:-மோசகரமான சித்தவிருத்திகள், விஷத்தின் ஸ்வபாவத்தையே யுடையன; பெரும்பாலும் முதலில் அவைகளின் அரோசிகம் தெரியாது; ஆனால் இரத்தத்தில் சிறிது உறைத்துவிட்டால், கந்தகச்சுரங்களைப்போல் பற்றி யெரியும்.—இப்படிச்சொன்னேனல்லவா:--திருஷ்டாந்தமாகப் பார், அதோ அவன் வருகிறதை! கசகசாவில்லை, மயக்க மருந்தில்லை, உலகத்திலுள்ள வேறெந்த மதுவுமேயில்லை, நேற்று உன்னதாயிருந்த இனிய நித்திரையை, ஒன்றுமே உனக்கினி யொருபொழுதும் கொடுக்கமாட்டாது.

[உதயலன் திரும்பி வருகிறான்.]

உத:—ஹா! ஹா! என்னை மோசஞ் செய்தாளா?

அகா:—ஏன், என்ன சங்கதி சேனாபதி! அந்த நினைவை விட்டுவிடுங்கள்.

உத:—என் கண்முன்னில்லாதே! ஒழி! என்னைச் சித்திரவதைக் குள்ளாக்கிவிட்டாய்:—சிறிதே தெரி

திருப்பிநினும், அதிகமாய் அவமானமடைந்தும் தெரியாதிருத்தலே மிகத்திறமென்பது சத்தியம்.

அகா:—ப்ரபோ, இப்பொழுதென்ன?

உத:—அவள் இரகசியமாய் அநுபவித்த காமாநுபோகங்களைப்பற்றி எனக்கு ஏதேனும் தெரியுமா? நான் காணவுமில்லை; நினைக்கவுமில்லை. அதனால் எனக்கு வருத்தமுமில்லை; மறுநாளிரவு உல்லாசமாய்க் களித்துச் சுகமாய்த் தூங்கினேன்; அவள் அதரங்களில் காசிபனிட்ட முத்தங்களை நான் காணவில்லை: கொள்ளை போனதையும் கொள்ளை போன பொருளின்மையையும் அறியானாயின், கொள்ளை கொடுத்தவனும் கொள்ளை கொடுத்தவனோ?

அகா:—அதைக்கேட்க எனக்கு வருத்தமாயிருக்கிறது.

உத:—இப்பொழுதோ, அந்தோ! என்மனச்சமாதானமென்ன; பேராசையையும் ஓர் அறமாக்கும் யுத்த தோரணைகளென்ன; ரதகஜதுரகபதாதிகள், பல வர்ணவிருதுக்கொடிகள், மனத்தில்உத்ஸாகத்தைக் கிளப்பி, வீராவேசத்தை யுண்டாக்கும் சங்கம், தாரை, கொம்பு, நகராஆதிய போர் வாத்திய முழக்கங்கள், இவற்றின்மீது எனக்குள்ள பேரபிமானமென்ன, எல்லாம் தொலைந்தன! யுகாந்த காலத்து இடியேறுபோல் ஓலமிட்டுப் பிணத்திரள்களைக் குவிக்கும் அஸ்திர சஸ்திர பாணங்களே, இனி உமக்கும் எனக்கும் ஒரு தொந்தமுமில்லை! என் உத்தியோகம் போய்விட்டது!

அகா:—இது தகுமோ, ப்ரபோ?

உத:—அடபாதகா! என் காதலி வியபிசாரியென்பதை நிச்சயமாக ருஜுப்படுத்தவேண்டும்,—இஃது உறுதியாயிருக்கவேண்டும்; எனக்குப் பிரத்தியக்ஷமாய்க் காட்டு.

[அவன் முன் கழுத்தைப் பிடித்துக்கொண்டு]

இல்லாவிட்டால், நித்தியமான என் ஆத்மாவின் மேல் ஆணை, கிளர்ந்தெழும் என் கோபாக்கினிக்கெதிராவதினும், ஒரு நாயாகவேனும் நீ பிறந்திருப்பின் நலமாயிருந்திருக்கும்!

அகா:—இவ்வளவுக்கு வந்துவிட்டதா?

உத:—என் கண்ணுக்குக் காட்டு; அல்லது, அற்ப சந்தேகத்துக்கும் சிறிதும் இடையில்லாதபடி அவ்வளவு திடமாக ருஜுப்படுத்தவேனும் செய்; இல்லாவிடின், நீ தொலைந்தவனே.

அகா:—மகாப்ரபோ,—

உத:—அவளையும் பழிசார்த்தி, என்னையும் வதைக்கிறதாயிருப்பின், உனக்குவிமோசனமேயில்லை; பின்பு, நீ, விண்ணுலகு கண்ணீர் பெருக்கவும், மண்ணுலகு பிரமித்து மலைக்கவும் தகுமான துர்க்கிருத்தியங்களைச் செய்யலாம்; ஏனெனின், உன்னை நரகத்திலாழ்த்த, அதனினும் கொடிதாக நீ யொன்றுமே செய்ய முடியாது.

அகா:—ஐயோ தருமசங்கடமே! ஐயோ தெய்வமே! பொறுத்தருள்! நீயும் ஒரு மனிதனா? உனக்கும் ஒரு ஆத்மாவாவது புத்தியாவது இருக்கிறதா? உன்னைக் கடவுள்தான் காப்பாற்றவேண்டும்! என் வேலையை வாங்கிக்கொள்:—என்யோக்கியதையை

யே ஒரு துர்க்குணமாக்கி விட்டேனே, நான் ஒரு நிர்ப்பாக்கிய மூடனே!—ஐயோ, பாழான மூடனே நான்! ஓ உலகமே! தெரிந்துகொள், தெரிந்துகொள்: நெறியாகவும் நாணயமாகவும் ஒழுகுவது ஆபத்தக்கிடமே:—இந்த நற்புத்தி போதித்ததற்காக உனக்கு வந்தனம். உண்மையான அன்பு இப்படிப்பட்ட தீங்கை விளைப்பதால், இனிமேல் ஒரு நண்பனையுமே நான் நேசிக்கமாட்டேன்.

உத:—இல்லை, நில்லு;—நீ யோக்கியனாகவே இருக்க வேண்டும்.

அகா:—நான் புத்திசாலியாகவன்றோ இருக்கவேண்டும்? ஏனெனின், யோக்கியதையோ முட்டாள்தனம் தான்; எதன் பொருட்டு உழைக்கின்றதோ அக்காரியத்தையே இழந்து விடுகிறது.

உத:—உண்மையாகவே, என் மனைவி கற்புடையவளாயிருக்கலாமென் றெண்ணுகிறேன்; அப்படி யில்லையென்றும் எண்ணுகிறேன்; நீ யோக்கியனென்றே எண்ணுகிறேன், அப்படியில்லையென்றும் எண்ணுகிறேன். எனக்கு ஏதாவது ருஜு வேண்டும். பூரண சந்திரனைப்போல் பிரகாசமாயிருந்த அவள் பெயர், இப்பொழுது என்முகமேபோல் மாசடைந்து கறுத்திருக்கின்றது.—நானிதைச் சகித்திரேன்.—என்ன சித்திரவதை செய்தாயினும், உண்மை தெரியவேண்டுமே!

அகா:—தெரிகிறது, ஐயா, தாங்கள் தாபத்தால் விழுங்கப்பட்டிருக்கிறீர்கள்: தங்களுக்கிதையேன் சொன்

னேனென்று நான் மனம் வருந்துகிறேன். உண்மையா தெரியவேண்டும்?

உத:—தெரியவேண்டுமா! இல்லை தெரிந்தே தீருவேன்.

அகா:—தெரிந்து கொள்ளலாம்: ஆனால் எப்படி? எப்படித் தங்கள் மனம் திருப்தியடையவேண்டும். ப்ரபோ! தாங்களே நேரில், பிரத்தியக்ஷமாய், மேற்பார்க்க விரும்புகிறீர்களா?

உத:—ஓ!

அகா:—அப்படிப் பார்க்கும்படி அவர்களைக் கொண்டு வருவது, சிரமமும் கஷ்டமுமான வேலையென்றெண்ணுகிறேன். பின்னையென்ன? பின்னை யெப்படி? நான் என்ன சொல்லட்டும்? எவ்வாறு சந்தேகம் தெளியும்? ஆயினும், நான் சொல்வது, அநுமான சங்கைகளும், உண்மை யின்னதென்று தெளிவாய்ச் சுட்டிக் காட்டும் நம்பக்கூடிய அநுசரணையான விஷயங்களும் தங்களுக்குப் போதுமாயின், ருஜுச் செய்யலாம்.

உத:—அவள் கற்பிழந்ததற்கு என் மனத்திற் பதிந்தூன்றக் கூடிய ஒரு காரணம் காட்டு.

அகா:—என் மனத்துக் கிசைந்த வேலையல்ல. ஆயினும், முட்டாள்தனமாய், என் மெய்ம்மையினாலும் தங்கள் மேலுள்ள பக்ஷத்தினாலுந் தூண்டப்பட்டு, இந்த விஷயத்தில் நான் இவ்வளவு தூரம் தலையிட்டுக்கொண்டபடியால், குறையும் முடிக்கிறேன். சில நாட்களுக்கு முன் நான் காசிபருடன் படுத்திருந்தேன்; கொடிய பல்வலியால் நோவுண்டு, எனக்குத் தூக்கம் வரவில்லை. நித்திரைக்காலத்தில், தங்கள் சமாசாரங்களையெல்லாம் வெளிவிட்

டுப் புலம்பும்படி, அவ்வளவு நெகிழ்ச்சியான சித்தத்தை யுடையவர்கள் சிலபேருண்டு: இப்படிப் பட்டவர்களி லொருவர் காசிபர்: தூக்கத்தில், "இனிய திசைமோகினி, நாம் சாக்கிரதையாயிருப்போம்; நம் காதலை மறைத்து வைத்திருப்போம்" என்று அவர் சொல்வது என் காதில் விழுந்தது; பின்பு, ஐயா, அவர் என் கையை வலுவாய்ப் பிடித்துக்குலுக்கி, "ஐயோ பாழான விதி உன்னைச் சிங்களவனுக்குக் கொடுத்ததே" என்று கூறினார்.

உத:—அடா! அநியாயமே! அநியாயமே!

அகா:—என்ன, அவர் கனவுதானே இது.

உத:—ஆயினும், அதற்கு முன்நிகழ்ந்த விஷயத்தை இது குறித்தது; அது கனவேயாயினும், சமுசயத்துக்கு ஒரு பலமான ஆஸ்பதமே.

அகா:—ஆகவே, இது, சொற்பமான மற்ற ருஜுக்களைப் பலப்படுத்தக்கூடும்.

உத:—அவளைச் சின்னபின்னமாய்க் கிழித்துவிடுகிறேன்.

அகா:—இல்லை, ஆயினும் ஆலோசித்துச் செய்யுங்கள்; இன்னும் ஒன்றையும் நாம் நேராகப்பார்க்கவில்லையே; அவளின்னும் கற்புடையவளாகவே யிருக்கலாம். இதைமட்டுஞ் சொல்லுங்கள்,—பூஞ்செடிபோலச் சித்திரவேலை செய்துள்ள ஒரு கைக்குட்டையைத் தங்கள் மனைவியார் கையில் தாங்கள் சில சமயங்களிற் பார்த்ததில்லையா?

உத:—அப்படிப்பட்டதொன்று நான் அவளுக்குக் கொடுத்தேன்; அதுதான் நான் முதல் முதல் கொடுத்த காதல் முத்திரை.

**அகா:**—எனக்கு அது தெரியாது; ஆனால் அப்படிப் பட்ட கைக்குட்டையொன்று, தங்கள் மனைவியாரு டையதென்பது நிச்சயந்தான், இன்று காசிபர் கையில் வைத்துக்கொண்டு முகம் துடைப்பதை நான் பார்த்தேன்.

**உத:**—அது அதாயிருந்தால்,—

**அகா:**—அதாயிருந்தாலுமே, அல்லது அவள் கைக்குட் டைகளில் வேறொதாயிருந்தாலுமே, அது, மற்ற ருஜுக்களுடன் அவளுக்கு விரோதமான சாக்ஷிய மாகிறது.

**உத:**—அந்த அடிமைக்காரப் பயலுக்கு நாற்பதினாயிரம் பிராணன்களில்லையே! நான் பழிவாங்குவதற்கு ஒரு ஜீவன் போதவே போதாது! இப்பொழுது தான் அது உண்மையென்று தெரிகிறது.— இதோ பார், அகாதா, என் ஆசை அருமைகளை யெல்லாம் இதோ ஆகாசத்திற் பறத்திவிட்டேன்; எல்லாம் ஒழிந்தது. கறுத்த மனவன்மையே, நீ கிடக்கும் ஆழமான நரகக்குழியினின்றும் பழி வாங்குதற்பொருட்டு எழுவாயாக! காதலே, என் இருதயத்தில் புனைந்திருந்த கிரீடத்தையும் வீற்றிருந்த சிம்மாசனத்தையும் துறந்து, கொடூ ரமான பகைமைக்குக் கொடுத்துவிடு; நெஞ்சமே, விஷப்பாம்புகளின் நாவுகளால். நிறைந்துள்ள நீ, வெம்பிப் பொங்குவாயாக.

**அகா:**—தயைசெய்து, சிறிது பொறுமை செய்யுங்கள்.

**உத:**—ஓ! இரத்தப்பழி, அகாதா, இரத்தப்பழி!

**அகா:**—பொறுங்கள், என்கிறேனே; ஒருவேளை தங் கள் மனம் மாறலாம்.

உத:—ஒருக்காலுமில்லை, அகாதா;இனி என் ஆலோசனை களெல்லாம், இரத்தப்பழிவாங்குவதொன்றையே கருதி, கரைபுரண்ட வெள்ளம்போல், ஒரே முகமாக வேகமாய்ச் செல்லும்; இரக்கம், காதல் என்று இனித் திரும்புவதேயில்லை. [மேல் நோக்கிக் கைகூப்பி] அதோ, பளிங்குபோல் பிரகாசிக்கும் விண்ணுலகின் மேலாணைவைத்து, நான் கூறிய மொழிகளை வற்புறுத்திச் சபதஞ் செய்கிறேன்.

அகா:—நில்லுங்கள்: [மேல்நோக்கிக் கைகூப்பி] எப்பொழுதும் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் நவக்கிரக தேவதைகளே! ஆகாசவாணியே! பூமாதேவியே! நீங்களே சாக்ஷி:—நீங்குற்றிருக்கும் உதயலர்பிரபுவின் ஊழியத்தின்பொருட்டு, அகாதனுகிய நான், இப்பொழுது, என் மனோவாக்குக் காயங்களின் பிரவர்த்தியை முற்றிலும் அர்ப்பணஞ் செய்வதைப் பார்த்துக்கொள்ளுங்கள்! அவர்மட்டும் உத்திரவு கொடுக்கட்டும், எவ்விதக் கொடுஞ்செயலாயிருப்பினும், அதைச்செய்து முடிப்பதே, அவர் தீங்குகளுக்காக என்பரிதாபத்தை நான் காட்டுவதாகும்.

உத:—வீணான வந்தனங்களாலன்றி, மனப்பூர்வமாக உன்நட்பை நான் தடையின்றி யேற்றுக்கொள்கிறேன். இந்த நிமிஷத்திலேயே பணிவிடையும் நியமித்துவிடுகிறேன்: இன்னும் மூன்று நாட்களுக்குள், காசிபன் உயிரோடில்லை யென்று நீ சொல்வதை நான் கேட்கவேண்டும்.

அகா:—என் நண்பர் இறந்துவிட்டார்; தங்கள் வேண்டு

கோளின் பேரில் இது செய்யப்பட்டது; ஆனால் அவள் உயிரோடிருக்கட்டும்.

உத :—அவளா! இப்பொழுது நீயே என் உபசேனாபதி.

அகா :—எப்பொழுதும் நான் தங்களவனே.

[போகிறார்கள்.]

இரண்டாம் காட்சி

செப்பறையில் அரண்மனை முற்றம்—பகல்.

[திசைமோகினியும் ஏமலீலையும் வருகிறார்கள்.]

திசை :—அந்தக் கைக்குட்டை எங்கே தவறியிருக்கும், ஏமலீலா?

ஏம :—நானறியேன், அம்மா.

திசை :—பொய்யல்ல, அதை யிழந்ததினும் தங்க மோகராக்கள் நிறைந்த என் பணப்பையை இழந்திருப்பின் அவ்வளவு பொருட்டாயிருந்திராது. உத்தமசீலராகிய என் நாதர், நம்பும்சுவபாவஸ்தர்; சமுசய குணத்தினருக்குள்ள இழிதன்மை யொன்றுமே இல்லாதவர்; அன்றேல், அவர் மனத்திற் கெட்ட சந்தேகங்களை யுண்டு பண்ண, இதுவே போதுமானதாயிருக்கும்.

ஏம:—அவருக்குச் சமுசயகுணமில்லையா?

திசை:—யார், அவருக்கா? அவர் அடியை மிதித்தவர்க்கும் அப்படிப்பட்ட துர்க்குணம் ஒன்றும் ஏற்படாதென்று எண்ணுகிறேன்.

ஏம:—பாருங்கள், அதோ வருகிறார்.

திசை:—காசிபரை அவர் திரும்பி அழைத்துக்கொள்ளும் வரையும், இப்பொழுது அவரை நான் விடமாட்டேன்.

[உதயலன் வருகிறான்.]

பிராணநாதா தங்கள் உடம்பு எப்படியிருக்கிறது?

உத:—என் துரைச்சி! சுகமே. [தனக்குள்ளேயே] ஓ! பாசாங்கு செய்வது எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது!—நீ சுகமோ, திசைமோகினி?

திசை:—பிராணநாதா, சுகமே.

உத:—உன் கையைக்கொடு: கண்ணே, இந்தக் கை கசிவாயிருக்கிறதே.

திசை:—மூப்போ, துக்கமோ, இன்னும் அது அறிந்ததேயில்லை.

உத:—இப்படிக் கசிவாயிருப்பது, ஸாமுத்திரிக லக்ஷணப்படி, அமிதமான பரோபகாரச் சிந்தையையும், மனவுதாரத்தையுங் குறிக்கின்றது:—உஷ்ணமும், உஷ்ணமுங் கசிவுமாயிருக்கின்றது. உன்னுடைய இந்தக் கைக்குச் சுவாதீன பந்தகமும், பட்டினியிருத்தலும், தேவாராதனையும், அதிகடுமையான சிக்ஷையும், விரதானுஷ்டானங்களும் ஆவசியகம். இது ஒரு நல்ல கை; கபடமற்ற கை.

திசை:—தாங்கள் அவ்வாறு கூறுவது தகுதியே: ஏனெனில், இந்தக் கையன்றோ என் இருதயத்தைத் தங்களுக்குக் கொடுத்தது.

உத:—உதாரமான கையே: முற்காலங்களில் இருதயங்களே கைகளையளித்தன; ஆனால் நம்முடைய நவீன சம்பிரதாயப்படி, கைகள்தாம் கொடுக்கப்படுகின்றன; இருதயங்களல்ல.

திசை:—எனக்கு இதெல்லாம் தெரியாது. இதிருக்கட்டும்; உங்கள் வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுங்கள்.

உத :—என் குயிலே, என்ன வாக்குத்தத்தம்?

திசை:—இங்குவந்து தங்களுடன் பேசும்படி காசிபருக்குச் சொல்லி யனுப்பியிருக்கிறேன்.

உத :—கண்ணில் ஏதோ தூளி சாடிக் கரிக்கின்றது; உன் கைக்குட்டையைக் கொஞ்சம் கொடு.

திசை :—இதோ, நாதா.

உத :—நானுனக்குக் கொடுத்தது.

திசை :—இப்பொழுது அது கையிலில்லை.

உத :—இல்லையா?

திசை :—மெய்யாகவே இல்லை, நாதரே.

உத :—அது தவறாயிற்றே. அந்தக் கைக்குட்டையை மலையாள தேசத்தாளொருத்தி, என் தாய்க்குக் கொடுத்தாள். அவள் ஒரு மந்திரவாதி; மனிதர்களின் நினைவுகளைக்கூடத் தெரிந்து கூறவல்லவள்: அதை என் தாய் வைத்திருக்குமளவும், என் தகப்பனை முற்றிலும் அவள் காதல்வசப்படுத்தி, அவனையவருக்குஇனியவளாக்குமென்றும்; ஆனால் அவள் அதை யிழந்துவிடின், அல்லது யாருக்காயினும் கொடுத்துவிடின், என் தகப்பனார் கண்கள் அவளை மிகவும் வெறுத்து, அவர் மனம் வேறு புதிய காதலிகளை நோக்குமென்றும் சொல்லி, அதை அவள் கொடுத்தாள்; என் தாய் சாகுந்தருணத்தில், என் கையிலதைத்தந்து, என் விதிவசப்படி நான் பெண்வேட்டபொழுது, அவளுக்கு அதைக் கொடுக்கும்படி சொன்னாள். நான் அப்படியே செய்தேன்; அதைச் சாவதானமாய் வைத்துக்கொள்; அதை உன் கண்மணிபோல் அருமையாகப் பாவித்துக்கொள்; அதை யிழப்பதினும்,

அல்லது யாருக்காவது கொடுத்து விடுவதினும், பெருங்கேடு வேறில்லையென்பது திண்ணம்.

திசை :—இது மெய்தானா?

உத :—இந்து உண்மையே; அதன் நெசவில் மந்திர மிருக்கிறது. பவனசக்கிரத்தைச்சூரியன் இருநூறு தடவை சுற்றியதைக் கண்டு கணக்கிட்ட ஒரு கிழக்குறிகாரி, தன் தீர்க்கதரிசன ஆவேசத்தில், அந்தச் சித்திர வேலையைச் செய்தாள்; அந்தப் பட்டைநூற்ற பூச்சிகள், புனிதமானவை; அன்றியும், கன்னிகைகளின் இரத்தாசயங்களைச் சேமித்து வைத்து, அவற்றினின்றும் சிறந்த தந்திரிகளால் வடிக்கப்பட்ட மந்திரௌஷதத்தால் அது சாய மூட்டப்பட்டது.

திசை :—ஆஹா! இதுண்மைதானா?

உத—கேவலம் சத்தியமே; ஆகையால் அதை நன்றாய்ப் பார்த்துக்கொள்.

திசை:—ஆனால், தெய்வமே, நான் அதை ஒரு பொழுதுமே பாராதிருந்தேனில்லையே!

உத:—ஆ! ஏனப்படி?

திசை:—தாங்களேனிப்படிப் படபடப்பாயும் மூர்க்கமாயும் பேசுகிறீர்கள்?

உத:—அது தவறிவிட்டதா? போய்விட்டதா? சொல்லு, அந்து இல்லையா?

திசை:—கடவுளே காக்க!

உத:—என்ன பதில்?

திசை:—அது தவறிப்போகவில்லை; ஆனால், போய்விட்டாலென்ன?

உத:—எப்படி!

திசை:—தவறிப்போகவில்லை யென்கிறேனே.

உத:—அதை யெடுத்துவா, நான் பார்க்கட்டும்.

திசை:—ஏன், நாதரே, நான் அதைக் கொண்டுவரக் கூடும்; ஆனலிப்பொழுது மாட்டேன். என் வேண்டுகோளை நான் வற்புறுத்திக் கேளாதபடி செய்யும் ஒரு தந்திரமே இது. காசிபரைத் திரும்பவும் தயை செய்து ஏற்றுக் கொள்ளுங்கள்.

உத:—அந்தக் கைகுட்டையை எடுத்து வா: என் மனம் சந்தேகப்படுகிறது.

திசை:—இதெல்லாம் இருக்கட்டும்; அவரினும் சமர்த்தர் உங்களுக்கொருபொழுதும் கிடையார்.

உத:—அந்தக் கைக்குட்டை.

திசை:—வாழ்நாளெல்லாம் தங்கள் சிநேகத்தைக் கொண்டே முன்னுக்குவர நம்பியிருந்தவர்; எத்தனையோ அபாயங்களைத் தங்களுடன் அநுபவித்தவர்,—

உத:—அந்தக் கைக்குட்டை.

திசை:—மெய்யாகவே, நீங்கள் செய்வது தவறே!

உத:—போ!

[போகிறான்.]

ஏம:—இவர் சமுசயகுண முள்ளவரில்லையா?

திசை:—இதற்குமுன் நானிப்படிப் பார்த்ததேயில்லை; நிச்சயமாகவே, அந்தக் கைக்குட்டையில் ஏதோ அதிசயமிருக்கிறது. அதை யிழந்ததால் நான் மிகவும் துர்ப்பாக்கியமானவளே.

**ஏம:**—ஒரு வருஷம் இரண்டு வருஷங்களில் ஒரு மனுஷனை நாமறிந்துகொள்ள முடியாது: அதோ பாருங்கள்—காசிபரும் என் புருஷரும்.

[காசிபனும், அகாசனும் வருகிறார்கள்.]

**அகா:**—வேறுவழியில்லை; அவளால்தான் ஆகவேண்டும்; அதோ! நல்லதிர்ஷ்டத்தைப்பாரும்; போய், அவளை வருந்தி வேண்டிக்கொள்ளும்.

**திசை:**—என்ன இப்பொழுது, காசிபரே, சமாசாரமென்ன?

**காசி:**—அம்மா, நான் முன்பு வேண்டிக்கொண்டதே. தங்கள் பலத்த சிபார்சு மூலமாக நான் திரும்ப உயிர்பெற்று, என் மனப் பூரணமாக நான் பூஜ்யதை செய்பவரின் பிரியத்துக்கு அருகனைச் செய்யும்படி, தங்களைப் பிரார்த்திக்கிறேன்.

**திசை:**—ஐயோ, காசிபரே! உமக்காக நான் பரிந்து பேசும் முயற்சி இப்பொழுது இசைவாயில்லை; என்னுதர் என்னுதராகவில்லை; குணத்தில் மாறியிருப்பதுபோலத் தோற்றத்திலும் அவர் மாறியிருந்தால், அவரை யெனக்கு இனம் தெரிய முடியாது. சத்தியமாகவே, என்னுலியன்றமட்டும் உமக்காகப் பரிந்துபேசி, நான் விடாது பேசியதனுல் அவரது அப்பிரியத்துக்கும் இலக்காகிவிட்டேன்! நீர் சிறிது பொறுக்கத்தான்வேண்டும்: என்னுற் கூடியதை நான் செய்கிறேன்; என் விஷயத்தில் நான் துணியக்கூடியதைவிட அதிகமாகவே செய்கிறேன்; அதைக்கொண்டு திருப்தியாயிரும்.

அகா:—எஜமானர் கோபமாயிருக்கிறாரா?

ஏம:—இப்பொழுதுதான் இங்கிருந்துபோனார்; சுவபாவமான சாந்தமில்லவேயில்லை.

அகா:—அவருக்கும் கோபம் உண்டா? அவர் சைநியங்களைக் காற்றிற் பறத்தி, பிசாசைப்போல் அவர் கையிலிருந்தே அவர் சொந்தச் சகோதரரைப் பாணங்களடித்துக் கொண்டுபோனதை நான் பார்த்திருக்கிறேன்;—அவருக்கும் கோபமு முண்டா? ஆனால் ஏதோ விசேஷமிருக்க வேண்டும்; நான் அவரிடம் போகிறேன்; அவரே கோபமுற்றால், அதில் ஏதோ சங்கதி யிருக்கவேயிருக்கிறது.

திசை:—தயைசெய்து சிறிது போய்வா.

[அகாதன் வெளியே போகிறான்.]

உண்மையில், ஏதோ துரைத்தன காரியம், அவர் தெளிவான சித்தத்தைக் கலக்கியிருக்கிறது; இவ்வித சந்தர்ப்பங்களில், பெரிய விஷயங்களே தங்கள் கருத்தாயிருப்பினும், அற்ப சங்கதிகளுக்காகக் கோபமுறுவது மனிதர் சுவபாவமே.

ஏம:—நீங்களெண்ணுகிறபடி, ஏதாவது இராஜரிக விஷயமாகவே யிருந்து, உங்களைப்பற்றிய ஒருவித மான எண்ணமோ, சமுசயமோ இல்லாமலிருக்கும்படி, கடவுளைப் பிரார்த்திப்போம்.

திசை:—ஐயோ, காலமே! நானதற்கு ஒருபொழுதும் இடம் கொடுக்கவில்லையே!

ஏம:—ஆனால், சந்தேகப்படுபவர்கள் அப்படிப் பதிற் சொன்னால் திருப்தியடையார்கள்; காரணம்பற்றியே அவர்கள் எப்பொழுதும் சந்தேகிக்கிறதில்லை; சந்தேக சுவபாவத்தினாலேயே சந்தேகங் கொள்கி

றூர்கள்; தனக்குத்தானே தாயும் தகப்பனுமான ஒரு குருபியே, அந்தச் சந்தேகமென்பது.

திசை:—என்னுதர் மனத்துள் அந்தக்குரூபப் பிறவி புகாதபடி கடவுள் காக்கட்டும்.

ஏம:—அம்மா, அப்படியே ஆருக.

திசை:—நான் போய் அவரைக் காண்கிறேன்.—காசி பரே, இங்குஉலாவிக்கொண்டிரும். அவர் தக்கபடி யிருந்தால், உம்முடைய விஷயத்தை எடுத்துப் பேசி, என்னுலேன்ற மட்டும் அதை முடிக்க வழி தேடுகிறேன்.

காசி:—நான் தாழ்மையுடன் தங்களுக்கு வந்தனமளிக்கி றேன்.

[போகிறூர்கள்.]

---

## நான்காம் அங்கம்.

### முதல் காட்சி.

செப்பறையில் அரண்மனை முற்றம்—மாலை.

[உதயலனும், அகாதனும் வருகிறூர்கள்.]

அகா:—அப்படி எண்ணுவீர்களா?

உத:—அப்படி எண்ணுகிறதா, அகாதா!

அகா:—ஆனல், என் மனைவிக்கு நான் ஒருகைக்குட்டை கொடுத்தால்,—

உத:—அப்புறமென்ன ?

அகா:—என்ன, பின்னே, அவளுக்கே அது சொந்தம், ப்ரபோ, அவளுடையதாகிவிட்டவே, அவள் எந்தப் புருஷனுக்கு வேண்டுமாயினும் அதைக் கொடுக்க லாமென்று எண்ணுகிறேன்.

**உத:**—அவள் மானத்துக்கும் அவள்தான் காவல்; அதை யும் அவள் கொடுத்துவிடலாமோ?

**அகா:**—அவள் மானமென்பது கண்ணுக்குப் புலப்ப டாத ஒரு பொருள்; உண்மையில், மானமில்லாத வர் அநேகர் அதையுடையவர்களாகவே அடிக்கடி தோன்றுகிறார்கள்: இதிருக்கட்டும், அந்தக் கைக் குட்டை விஷயமாக,—

**உத:**—ஸ்வாமி சத்தியமாக, அது மறந்தே போனால் எனக்கு மிகச் சந்தோஷமே:—யாவருக்கும் பய த்தை யுண்டுபண்ணிக்கொண்டு, தொத்து நோய் பரவிய வீட்டைச் சுற்றிக் கூகை வட்டமிடுவது போல, அந்தோ என் ஞாபகத்துக்கு வருகின்றது,- அவன் கையில் என் கைக்குட்டை யிருந்ததெ ன்று சொன்னீரே.

**அகா:**—ஆம், அதனாலென்ன?

**உத:**—அந்தோ அவ்வளவு சரியல்லவே.

**அகா:**—என்ன! அவர் தங்கள் மானத்தைக் கெடுப்பதை நானே பார்த்ததாகச் சொல்வதாயிருந்தாலோ? அல்லது, சிலவிடப்பயல்கள், தங்கள் அநுபவத்தை வெளியே பிதற்றித்திரிவதுபோல, அவர் சொல்வ தைக் கேட்டிருந்தாலோ.—

**உத:**—அவனேதாவது சொல்லியிருக்கிறானா?

**அகா:**—சொல்லியிருக்கிறார், ப்ரபோ; ஆனால் இதை மட் டும் வெகு உறுதியாய்க் கொள்ளுங்கள்: ஒன்றுஞ் சொன்னதில்லை யென்று கள்ளச்சத்தியஞ் செய்து விடுவார்.

**உத:**—அவன் சொன்னதென்ன?

அகா:—ஆணைப்படிக்கு, அவர் இருந்ததாக,—

உத:—என்ன? என்ன?

அகா:—என்ன வேண்டுமாயினும் வைத்துக்கொள்ளுங்கள்.

உத்:—கைக்குட்டை,—ஒப்புக் கொள்கிறது,—கைக்குட்டை!—குற்றத்தை ஒப்புக்கொண்டு, அதற்காகக் கழுவேற்றப்படுகிறது;—முதலில் கழுவில் போடுகிறது, பின்பு ஒப்புக்கொள்கிறது.—அதற்கு நடுங்குகிறேன்; காரணம் ஏதுமின்றி இயற்கை இவ்விதமாயிருண்டு தோன்றாது. வார்த்தைகளல்ல, யானிப்படி நடுங்குவது; சீ!—இது மெய்தானா? ஒப்புக்கொள்கிறது,—கைக்குட்டை! —ஓ, பிசாசே!—[மயங்கி விழுந்து விடுகிறான்.]

அகா:—உன் வேலையை நடத்து, என் மருந்தே, வேலையை நடத்து! எதையும் நம்பும் பேதமையுள்ள மூடர்கள் இப்படித்தான் பிடிபடுகிறார்கள்; யோக்கியதையும் கற்பும் வாய்ந்த ஸ்திரீகள் அநேகர், இவ்வாறே, ஒரு குற்றமுமேயின்றி, அபகீர்த்தியடைகிறார்கள்.—என்ன, ஓ, ப்ரபோ! ப்ரபோ! நான் கூப்பிடுகிறேனே! உதயலரே! யார், காசிபரா?

[காசிபன் வருகிறான்.]

காசி:—என்ன விசேஷம்?

அகா:—பிரபு காக்கைவலியில் விழுந்துவிட்டார்: இது இரண்டாவது தரம் வலிப்பு வந்திருக்கிறது. நேற்றொரு வலிப்பு வந்தது.

காசி:—நெற்றிப் பொருத்துக்களைச் சுற்றித் தேய்.

அகா:—வேண்டாம், அப்படிச் செய்யாதேயும்; அந்த மயக்கம் தானாகவே மெதுவாய்க் கழியவேண்டும்: இவ்லாவிடின் வாயில் நுரைததும்பிச், சிறிதுநேரத்தில் வெகு பலமான பைத்தியவெறி வந்துவிடுகிறது. பாரும், அதோ அசைகிறார்: நீர் சிறிது நேரம்வெளியிற்போயிரும். அவருக்கிப்பொழுதே சுகமாய்விடும்: அவர் போன பிறகு, ஒரு முக்கிய விஷயமாக உம்மோடு பேச விரும்புகிறேன்.

[காசிபன் வெளியே போகிறான்.]

எப்படியிருக்கின்றது, சேனாபதி?

உத:—அவனைத் ஒப்புக்கொண்டானா?

அகா:—ப்ரபோ, அண்மைத்தனத்தைக் காட்டுங்கள்.

உத:—நேர்த்தியான பெண்! நல்ல ரூபவதி! மிகவும் மனோரம்மியமான பெண்!

அகா:—அதையெல்லாம் தாங்கள்மறந்துவிடவேண்டும்.

உத:—ஆம், அவள் நாசமாய்ப்போக! இன்றிரவே அவளைக்கொன்றுவிடுகிறேன். என்மனம் கல்லாகிவிட்டது; நெஞ்சைத் தட்டினால் என்கையே புண்ணாகிறது.—ஐயோ! இவ்வுலகில் எங்குமே அவளினும் மனோரம்மியமான ஸ்திரீ கிடையாது; ஒரு சக்ரவர்த்தியின் அருகிருந்து, அவரையும் ஏவல் கொள்ளத்தக்கவளே, அவள்!

அகா:—இல்லை, தாங்கள் அவ்வாறு நினைக்கலாகாது.

உத:—கழுவிலேற்று அவளை! அவளிருக்கும் நிலைமையைத்தான் கூறுகிறேன்:—ஊசிகொண்டு சித்திரப்பூவேலைகள் எவ்வளவு நேர்த்தியாய்ச் செய்கிறாள்! சங்கீதத்தில் என்ன சாமர்த்தியம்!—பட்ட மர

மும் பால்சொரியுமே அவள் பாட்டைக்கேட்டால்!-
என்ன பேச்சு நயம்! என்ன புத்தி சாதுரியம்!

அகா:—இத்தனையும் இருந்தும் நடை தவறியதால்,
இன்னும் மிகக் கெட்டவளேயவள்.

உத:—ஒ, ஆயிரம், ஆயிரம் மடங்கு கெட்டவளே:—
அன்றியும், என்ன சாத்துவிகமான சுவபாவம்!

அகா:—ஆம், அமித சாத்துவிகமே.

உத:—ஆம், ஆம், அது மெய்யே: ஆயினும், அவள்
கெட்டது என்ன பரிதாபம், அகாதா! அந்தோ
அகாதா! என்ன பரிதாபம், அகாதா!

அகா:—அவள் துர்நடக்கையைத் தாங்கள் இவ்வளவு
இளக்கமான நெஞ்சோடு நோக்குவதானல், அவ்
வாறு பகிரங்கமாயொழுகும்படி அவளுக்கு ஒரு
சுதந்திரப் பட்டயம் கொடுத்துவிடுங்கள்; தங்க
ளுக்கு அந்த அவமானமில்லாவிட்டால், வேறொரு
வருக்குமேயில்லை.

உத:—சிறிது விஷம் கொணர்ந்துகொடு, அகாதா; இன்
றிரவே:—நான் அவளுடன் வாதாடமாட்டேன்
ஏனெனின், அப்படிச்செய்தால், அவள் ரூபமும்
அழகும் ஒருவேளை என் மனத்திடத்தைக் குலை
த்துவிடும்,—இன்றிரவே, அகாதா.

அகா:—விஷத்தினல் வேண்டாம்; அவள் படுக்கையி
லேயே மூச்சைப்பிடித்துக் கொன்றுவிடுங்கள்;
அவள் அவமானப்படுத்திய படுக்கையிலேயே
அதைச் செய்யுங்கள்.

உத:—சரி, சரி;அது நல்ல நியாயமே; அதுதான் சரி.

அகா:—காசிபருக்கோ,—அவருக்கு நான் ஏற்பாடு செய்து விடுகிறேன்: நடு நிசிக்குள்மேல் சமாசாரம் தெரிவீர்கள்.

உத:—நிரம்பவும் நல்லது. [உள்ளே எக்காளவொலி கேட்கிறது] அதென்ன எக்காளம்?

அகா:—ஏதோ கொற்கையிலிருந்து என்பது நிச்சயமே. அரசரிடமிருந்து லக்ஷ்மணர் வந்திருக்கிறார்: தங்கள் மனைவியாரும் கூட வருகிறார் பாருங்கள்.

[லக்ஷ்மணனும், திசைமோகினியும், ஏவலரும் வருகிறார்கள்.]

லக்ஷ்ம:—தங்களைக் கடவுள் காப்பாராக, உத்தமசேனாபதி!

உத:—ஐயா, மனப்பூரணமாய்த் தங்களுக்கும் அப்படியே ஆகுக.

லக்ஷ்ம:—கொற்கையாளியும் துறைத்தனச் சங்கத்தாரும் தங்களுக்கு வந்தனமளிக்கின்றார்கள்.

[ஒரு நிருபம் அவன் கையில் கொடுக்கிறான்.]

உத:—அவர்கள் ஆஞ்ஞாபனத் திருமுகத்தைச் சிரசின் மேல் ஏற்கிறேன்.

[நிருபத்தைத் திறந்து வாசிக்கிறான்.]

திசை:—அத்தான் லக்ஷ்மணரே! ஊரில் என்னவிசேஷம்?

அகா:—ஐயா, தங்களைக்காண மிகச் சந்தோஷமுறுகிறேன்; செப்பறைக்குத் தங்கள் வரவு நல்லதாகுக.

லக்ஷ்ம:—உமக்கு வந்தனம்; உபசேனாபதி காசிபர் சுகமோ?

அகா.—ஐயா, இருக்கிறார்.

திசை:—அத்தான், அவருக்கும் என்னுதருக்கும் ஒரு மனஸ்தாபம் நேரிட்டிருக்கிறது; ஆனால் நீர் வந்து விட்டீரே, எல்லாம் சரியாய்விடும்.

உத:—அது அவ்வளவு நிச்சயமா?

திசை:—பிராணநாதா?

உத:—[வாசிக்கிறான்.] 'இதைச் செய்யத் தவறக் கூடாது'—

லக்ஷ்ம:—அவர்கள் கூப்பிட்வில்லை; நிருபம் வாசிப்பதி லேயே கவனமாயிருக்கிறார்கள். நம் பிரபுவுக்கும் காசிபருக்கும் மனஸ்தாபமா?

திசை:—அதை என்னென்றுசொல்ல? மிகப் பரிதபிக் கத்தக்கதே. காசிபரின்மேல் எனக்குள்ள பக்ஷத் துக்கு, அவர்களிருவரையும் கூட்டுவிக்க என்ன பாடும் படுவேன்.

உத:—பாழாய்ப்போக!

திசை:—பிராணநாதா?

உத:—புத்தியிருக்கிறதா?

திசை:—என்ன! கோபமாயிருக்கிறார்!

லக்ஷ்ம:—ஒருவேளை அந்த நிருபம் கோபமூட்டி யிருக்க லாம்; ஏனெனில், இவ்விடத்து ஆட்சிக்குக் காசி பரை அவர்களுக்குப் பதிலாக நியமித்து, அவர்களை ஊருக்குத் திரும்பும்படி அதில் கட்டளை பிறந் திருக்கிறதென் றெண்ணுகிறேன்.

திசை:—உண்மையாகவே, எனக்கு அது சந்தோஷமே.

உத:—அப்படியா!

திசை:—பிராணநாதா?

உத:—உன் பைத்தியத்தைக்கண்டு சந்தோஷிக்கிறேன்.

திலை:—என், பிராணநாதா?

உத:—பிசாசே! [அவளை அடிக்கிறான்.]

திசை:—அடிக்கும்படி நானொன்றும் செய்யவில்லையே.

லக்ஷ்ம:—ப்ரபோ, நான் பிரத்தியக்ஷமாய்க் கண்டதாகப் பிரமாணஞ் செய்தாலுங்கூட, இதைக் கொற்கையில் நம்ப மாட்டார்கள்: இது தகாததே: அவளை ஆறுதல் செய்யுங்கள், அழுகிறாள்.

உத:—ஓ, பிசாசே, பிசாசே! ஸ்திரீகளின் கண்ணீரால் நிலம் கருவுறுமாயின், அவள் வடிக்கும் ஒவ்வொரு துளியும் ஒவ்வொரு முதலையாகச் சனிக்கும்.—என்கண் முன் நில்லாது ஒழி!

திசை:—தங்களுக்குக் கோபமூட்டிக் கொண்டிரேன். [போகிறாள்.]

லக்ஷ்ம:—உண்மையில், சொற்படி கீழ்ப்படிந்து நடக்கும் சீமாட்டியே:- தயைசெய்து அவளைத் திரும்ப அழையுங்கள்.

உத:—அம்மாளு! [திசைமோகினி திரும்பி வருகிறாள்.]

திசை:—பிராணநாதா!

உத:—ஐயா, அவளிடத்தில் தங்கள் காரியமென்ன?

லக்ஷ்ம:—யார், என்னையா கேட்கிறீர்கள், ப்ரபோ?

உத:—ஆம்; அவளைத் திரும்பியழைக்க வேண்டினீர்களே நீங்கள்: ஐயா, அவள் எப்படி வேண்டினும் திரும்புவாள், ஆயினும் மேற்சென்று கொண்டுமிருப்பாள். மறுபடியும் திரும்புவாள்; அன்றியும், அவளுக்கு அழவும் தெரியும், ஐயா, அழவும் தெரியும்; தவிரவும், அவள் கீழ்ப்படிந்து நடப்பவளே; தாங்கள் சொல்வதுபோல், கீழ்ப்படிந்து நடப்பவளே.—மிகவும் கீழ்ப்படிந்து நடப்பவளே

—உன் அழுகை நடக்கட்டும்.—ஐயா, இந்த (நிருப) விஷயமாக,—ஓ! என்ன மாய்மாலக் கண்ணீர்!—நான் ஊருக்குத் திரும்பும்படி கட்டளை கிடைத்திருக்கிறது,—தொலை இங்கிருந்து; சற்றுப் பொறுத்துக் கூப்பிட்டனுப்புகிறேன். ஐயா, நான் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து கொற்கைக்குத் திரும்புகிறேன்.—இராதே இங்கே, ஒழி! [திசைமோகினி போகிருள்.] காசிபன் என் ஸ்தானத்தைப் பெறட்டும். தவிரவும், ஐயா, இன்றிரவு தாங்கள் என்னுடன் போஜனஞ் செய்யும்படி வேண்டிக்கொள்கிறேன்: ஐயா, தாங்கள், செப்பறைக்குவந்தது சந்தோஷமாயிற்று.—வெட்கமேது, வெட்கம்! [போகிருன்.]

லக்ஷ்ம:—நம் ஆலோசனை சபையார் அனைவரும் ஒரே மனமாகச் சகல விஷயங்களிலும் சமர்த்தரென்று கூறும் உத்தமச் சிங்களவர் இவர் தாமோ? இவர் தாமோ கோபதாபத்தாற் சிறிதும் அசைவுறாத மனோதிடத்தையுடையவர்? இடையூறுகளும் விபத்துக்களும், மலை மேல்விட்ட அம்புபோல், எவ்வித ஊறுமே செய்ய ஏலாத திடமான ஆண்மையையுடையவரும் இவரேயோ?

அகா:—அவர் மிகவும் மாறியிருக்கிருர்.

லக்ஷ்ம:—என்ன! தம் மனைவியையே அடிக்கிறதா!

அகா:அதுசரியில்லைதான்; ஆயினும், அவ்வளவோடு நின்று, மேல் ஒன்றும் நடக்காவிட்டால் நலமே.

லக்ஷ்ம:—அதுது அவர்வழக்கமா, என்ன? அல்லது அந்த நிருபம் அவர் கோபத்தைக் கிளப்பி, இந்தத் துர்க்குணத்தை நூதனமாயுண்டாக்கிற்றோ?

அகா:—ஐயோ, ஐயோ! நான் கண்ணுற்கண்டதையும் அறிந்திருப்பதையும் வெளியிடுவது என் யோக்கியதைக்குத் தக்கதில்லையே! நீங்களே அவரைக் கவனியுங்கள்: நான்சொல்லவேண்டாதபடி, அவர் நடவடிக்கைகளே அவர் குணத்தைக்காட்டிவிடும்: நீங்கள்மட்டும்அவரைத்தொடர்ந்து சென்று, இன்னும் எவ்வாறு நடந்து கொள்கிறாரென்பதைக் கவனியுங்கள்.

லக்ஷ்ம:—அவர் நான் நினைத்தபடியில்லாததைக் கண்டு மனம் வருந்துகிறேன்.

[போகிறார்கள்,]

இரண்டாம் காட்சி.

செப்பறை அரண்மனையில் ஒருகூட்டம்—முன்னிரவு.

[உதயலனும். ஏமலீலையும் வருகிறார்கள்.]

உத:—ஆனால் நீ ஒன்றுமே பார்த்ததில்லையா?

ஏம:—நான் ஒருபொழுதும் பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை, சந்தேகப்பட்டதுமில்லை.

உத:—ஆம், அவளும்காசிபனும் கூடவிருக்கும்பொழுது பார்த்தேயிருக்கிறாய்.

ஏம:—ஆனால் அப்பொழுது நான் ஒரு தீங்கும் கண்டதில்லை; அன்றியும் அவர்கள் பேச்சில் ஒவ்வொரு சொல்லையும் நான் கேட்டுக்கொண்டிருந்தேன்

உத:—என்ன! அவர்கள் ஒருபொழுதும் கிசுகிசென்று மெதுவாய்ப் பேசவில்லையா?

ஏம :—இல்லவேயில்லை, ப்ரபோ.

உத :—அல்லது உன்னைஎங்கேயாவது அனுப்பிவிடவும் இல்லையா?

ஏம :—இல்லவேயில்லை.

உத :—அவள் விசிறி, கைக்குட்டை, யாழ், எதையாவது எடுத்துவரும்படி அனுப்பினதில்லையா?

ஏம :—இல்லவேயில்லை, ப்ரபோ.

உத :—நீ சொல்வது நம்பும்படியில்லையே.

ஏம :—ப்ரபோ, அவள் கற்புடையவளென்று என் ஆத்மாவையே பணயமாக நான் துணிந்துவைப்பேன்: தாங்கள் வேறுவிதம் நினைத்தால், அவ்வெண்ணத்தை நீக்கி விடுங்கள்.—தங்கள் இருதயத்துக்கு அது அவமானமே. எந்தப் பாதகனாவது தங்களுக்கு இந்தச் சமுசயத்தை உண்டுபண்ணியிருந்தால், சுவாமி அவனுக்குத் தீராநரக தண்டனையை விதிக்கட்டும்! ஏனெனின், அவளிடத்திலேயே யோக்கியதையும் கற்பும் சத்தியமும் இல்லையெனின், ஒரு புருஷனுமே பாக்கியவானல்ல; அவர்கள் மனைவிமார்களில் சிறந்த பதிவிரதைகளுங் கூடக் கொடும்பழிக்கு உள்ளாகத்தக்கவர்களே.

உத :—அவளை யிங்கே வரச்சொல்:—போ. [ஏமலீலை வெளியே போகிறாள்] அவள் சரியாகத்தான் சொல்லுகிறாள்;—ஆனால் இவ்வளவு கூடப்பேசத் தெரியாத அப்பாவிகளுமுண்டா? துர்விஷயமான இரகசியங்களுக்கெல்லாம்சேமக்களஞ்சியம்.இவள் உள் உடந்தையாயிருப்பவள். அப்படியிருந்தும் வெகு பக்தி சிரத்தையுடன் இவள் தியான ஜபம் பண்ணுவதை நான் பார்த்திருக்கிறேன்.

[ஏமலீலையுடன் திசைமோகினி வருகிறாள்.]

திசை :—பிராணநாதா, தங்களிஷ்டமென்ன?

உத:—சற்று இங்கு வா, என்குயிலே.

திசை:—தங்கள் பிரியமென்ன.

உத:—உன் கண்களைப் பார்க்கட்டும்; என் முகத்தைப் பார்.

திசை:—இதென்ன, இப்படிச் சொல்கிறீர்கள்!

உத:—[ஏமலீலையை நோக்கி] உன் தொழிலைச் சிறிது காட்டு, அம்மாளு; கதவை மூடிக்கொண்டுபோட யாராவது வந்தால் இருமி, அல்லது தும்மி ஜாடை; செய்து தெரியப்படுத்து; உன் தொழிலே; நிற்காதே, சீக்கிரம் போ.

[ஏமலீலை வெளியே போகிறாள்.]

திசை:—தங்கள் பேச்சின் அர்த்தத்தை வெளியிடும்படி காலில் விழுந்து பிரார்த்திக்கிறேன். தங்கள் வார்த்தைகளில் ஏதோ கடுங்கோபமட்டுந் தெரிகிறதேயன்றி, அவற்றின் பொருள் எனக்குத் தெரியவில்லை.

உத:—ஏன், யாரடி நீ?

திசை:—தங்கள் மனைவி, நாதரே, தங்கள் உண்மையும் பக்ஷமுமுள்ள மனைவியே.

உத:—வா, அப்படிச் சத்தியஞ் செய்து, கள்ளப்பிரமாணஞ் செய்ததற்காக நரகத்துக் காளாகிவிடு; இல்லாவிடின், நீ தெய்வலோகத்துப் பெண்ணைப் போலிருப்பதால், உன்னை நரகத்துக்கிழுத்துச் செல்லக் கால தூதர்களே பயப்படக்கூடும்: நீ பதிவிரதைதானென்று பிரமாணஞ் செய்.

திசை:—கடவுள் அதை உண்மையாய் அறிவார்.

உத:—நீ நெறிதவறியவளென்பது கடவுளுக்கு உண்மையாகத் தெரியும்.

திசை:—யார் விஷயத்தில், நாதரே? யாருடன்? நான் எப்படி நெறி தவறினவள்?

உத:—ஹா! திசைமோகினி!—போ! போ! போ!

திசை:—ஐயோ, கஷ்டகாலமே!—நீங்கள் ஏன் அழுகிறீர்கள்? பிராணநாதா, தங்கள் கண்ணீருக்கு நானோ காரணம்? ஊருக்கு நீங்கள் திரும்பும்படி வந்திருக்கும் கட்டளைக்கு என் தந்தையே காரணமாயிருக்கலாமென்று நீங்கள் ஒருக்கால் சந்தேகித்தால், அதற்கு என்மேற் குற்றங் கூறாதேயுங்கள்: நீங்கள் அவரை இழந்துவிட்டீர்களானால், ஏன், நானும் அவரை இழந்தவளே.

உத:—என்னைச் சோதிக்கத் திருவுளங்கொண்ட தெய்வம், எனக்கு வேறெவ்விதத் துக்கங்களை யுண்டு பண்ணியிருப்பினும், நானாவித கஷ்டங்களையும் அவமானங்களையும் என் வெறுந்தலையின் மேற் சுமத்திருப்பினும், என்னைக் கொடிய வறுமை வாரிதியில் மூழ்கும்படி ஆழ்த்தியிருப்பினும், நானும் என் சகலவெண்ணங்களும் நோக்கங்களும் வீணாக மடிய என்னை அடிமைச் சிறையிலிட்டிருப்பினும், ஏதோ ஒரு சிறு துளியளவு பொறுமை யாவது என் மனத்தில் எங்காயினும் தங்கிக் கை யுதவி யிருக்கும்: மேலும், யாவரும் எப்பொழுதும் கைகாட்டியிகழும்படியான அவமானத்துக்குஎன்னை நிலைத்த இலக்காக்கி யிருப்பினும், அந்தோ! அதையும் பொறுத்துக்கொள்ளக் கூடும்: சரி, இருக்கட்டும்: ஆனால், என் இருதயத்தையே நான் சேமித்து வைத்திருக்கும் களஞ்சியம், என் ஆருயிரின் மெய்ந்நிலை, என் வாழ்க்கைப் பெருக்குக்கு இன்றி

யமையாத அருஞ்சுனை, அங்கிருந்தே என்னைத் துரத்தலாயிற்றே! அன்றேல், கெட்ட தேரைகள் கூடிக் குஞ்சுபொரிக்கும் ஒரு தொட்டியாக, அதை வைத்திருக்கும்படி யாயிற்றே!—அழகும் தெய்வத்தன்மையும் வாய்ந்த பொறுமையே! இனியுன் தோற்றத்தை மாற்றிவிடு,—ஆம், இனி நரகத்தைப்போல் பயங்கரமாகிவிடு!

திசை:—என்னுதர் என் கற்பைச் சந்தேகிக்கவில்லையென்று நம்புகிறேன்.

உத:—ஓ, ஆமாம்; இறைச்சிக் கடைகளிற் பறக்கும் பொழுதே கூடிக் கருவுறும் கோடைகாலத்து ஈக்களுக்குள்ள கற்பே. மனத்தைக் கவரும்படியான அழகும், தலைவலியை உண்டு பண்ணும்படியான அளவு நறுமணமும் பொருந்திய புற்பதரே! நீயேன் பிறந்தாய்!

திசை :—ஐயோ! என்ன அறியாப் பாவத்தை செய்துவிட்டேன்.

உத :—என்ன செய்தாயா! என்ன செய்தாயா! அதைக் கண்டு விண்ணுலகு மூக்கையடைத்துக் கொள்கின்றது,சந்திரனும் கண்ணைமூடிக்கொள்கின்றான்; ஒழுங்கு நியாயமின்றிக் கண்டதையெல்லாம் முத்தமிட்டுச் செல்லும் காற்றுமே கூசி, அதைக் கேட்க மனமின்றிப் பூமியின் கீழ், சுரங்கங்களில் வாய்மூடி யொளிக்கின்றது.—என்ன செய்தாயா! வெட்கங்கெட்ட வேசையே!

திசை :—கடவுளாணை, தாங்கள் என்மேற் சொல்வது தவறே.

உத :—நீ யொரு வேசியில்லையா?

திசை :—ஐயோ தெய்வமே! ஒருநாளுமில்லை. இந்தச் சரீரத்தை, மற்றவர் கெட்டவிதமாக அக்கிரமமாகத் தொடாதபடி, என்னுதருக்காகக் காப்பாற்றி வருவது வேசைத்தனம் அன்றெனின், நான் அப்படிப்பட்டவளில்லை.

உத :—என்ன! இது மெய்தானு?

திசை :—ஸ்வாமிக்குத் தெரியும்.

உத :—ஆனல் என்னை மன்னித்துக்கொள். சிங்களவனை விவாகஞ் செய்து கொண்ட கொற்கை நகரத்துச் சூதுக்கார வேசி நீ என்றெண்ணினேன்.-இந்தா, அம்மாளு, நரக வாயிலில் நின்று ஆள்பார்க்கிறவளே, உன்னை, ஆம், உன்னைத்தான் கூப்பிடுகிறேன்! உன் சிரமத்துக்காக, இதோ, காசு; வாயை மூடிக்கொள்; எங்கள் சங்கதியை வெளி விட்டு விடாதே.

[வெளியே போகிறான்.]

[ஏமலீலை திரும்பி வருகிறாள்.]

ஏம :—ஐயோ! இவர்மனத்தில் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறார்,—அம்மணீ! உங்களுக்கு என்ன செய்கிறது? ஏன், அம்மா, உங்களுக்கு என்ன செய்கிறது?

திசை:—அரைத் தூக்கம்போல் மயக்கமாயிருக்கிறது.

ஏம:—அம்மா, எஜமானர் எனிப்படி யிருக்கிறார்?

திசை:—யார்?

ஏம:—என், என் எஜமானர், அம்மா?

திசை:—உன் எஜமானர் யார்?

ஏம:—என் கண்ணாட்டி, உங்கள் நாதரே.

திசை:—எனக்கொருவருமில்லை: ஏமலீலா, என்னுடன் பேசாதே; என்னால் அழவும் முடியவில்லை; கண்ணீரைத் தவிர வேறு சொல்வதற்கு மறுமொழியுமில்லை. இன்றிரவு, படுக்கைமீது, என் கலியாணத்தன்றிரவு விரித்த துப்பட்டிகளையே விரித்துவை-, மறந்துவிடாதே:—உன் புருஷனை இங்கே கூப்பிடு.

ஏம:—எல்லாம் எப்படி மாறிவிட்டது?

[வெளியே போகிறாள்.]

திசை:—நானிப்படி நடத்தப்படுவது தகுதிதான், மிகவும் தகுதியே. என் அற்பப் பிழையைக்கொண்டும் அணுவேனும் அவர் கெட்ட எண்ணங் கொள்ளும்படி, நான் எவ்வாறு நடந்து கொண்டேன்?

[ஏமலீலை அகாதனுடன் திரும்பி வருகிறாள்.]

அகா:—அம்மா, தங்களிஷ்டமென்ன? தங்களுக்கென்ன செய்கிறது?

திசை:—எனக்குச் சொல்லத் தெரியவில்லை. சிறு குழந்தைகளுக்குப் போதிப்பவர்கள், நயமான வழிகளாலும், இலேசான வேலையை நியமித்தும் கற்பிக்கிறார்கள்: அவரும் என்னைஅப்படியே கண்டித்திருக்கலாம்; ஏனெனின், உண்மையில், கண்டிப்பு விஷயத்தில் நானும் ஒரு குழந்தையே.

அகா:—சங்கதியென்ன, அம்மா?

ஏம:—ஐயோ! நாதரே, உத்தம ஸ்திரீகள் பொறுக்க முடியாதவிதமாக, அவர்களை எஜமானர் வெகு கடுமையாகவும் அவதூறாகவும் பட்டி வியபிசாரியென்று பழிகூறித் திட்டினார்.

திசை:—நான் அப்பேர்க்கொத்தவளா, அகாதா?

அகா:—எப்பேர், அம்மா?

திசை:—நான் அப்படிப்பட்டவளென்று என்னுதர் சொன்னதாக அவள் சொல்லுகிற பெயர்.

ஏம:—குடிவெறியிலிருக்கும் பிச்சைக்காரன் கூடத் தன் வைப்பாட்டியை அவ்வாறு திட்டமாட்டான்.

அகா:—அவரேன் அப்படிச் செய்தார்?

திசை:—நானறியேன்; நானப்படிப்பட்டவளல்ல வென்பது நிச்சயமே.

அகா:—அழாதேயுங்கள், அழாதேயுங்கள்:—ஐயோ காலமே!

ஏம:—எத்தனையோ மேலானவரன்களையும், தகப்பனாரையும், சுவதேசத்தையும், இஷ்டர்களையும் அவர்கள் துறந்து வந்தது இப்பெயர் கொள்ளவா? இப்படியானல், யார்தாம் அழமாட்டார்?

திசை:—அது என் துர்ப்பாக்கியமே.

அகா:—என்ன கேடிது? அவருக்கிந்த எண்ணம் எங்கிருந்து வந்தது.

திசை:—கடவுளே யறிவார்.

ஏம:—நான் சொல்லுகிறபடி இல்லாவிடின் என்னை சிக்ஷிக்கலாம்: எவனே ஒரு பாழான பாதகன், வெகு சுறு சுறுப்பாய்க் கோள் கூறிப் பிரியஞ் சம்பாதிக்கும் திருடன் எவனே ஒருவன், பொய் சொல்லி ஏமாற்றும் அடிமைக்காரப்பயல் எவனே ஒருவன், ஏதோ ஓர் உத்தியோகத்தையடையும் பொருட்டு, இந்த வீண் பழியை உண்டு பண்ணி

யிருக்கிறான்; இல்லாவிடின் என்னைக் கழுவிலேற்ற லாம்.

அகா :—சீ! அப்படி யொருவனுமில்லை; அது நடக்கக் கூடியதல்ல.

திசை:—அப்படியாவனாயினுமிருப்பின், அவனைக்கடவுள் மன்னிப்பாராக!

ஏம :—கழுமரமே அப்படிப்பட்டவனுக்கேற்ற மன்னிப்பு! அவர்களோடு யார் பழகுகிறார்கள்? இடம் எங்கே? எப்பொழுது? எப்படி? என்ன பொருத்த மிருக்கிறது? எவனோ ஒரு மகா பாதகன், இழி குணமுள்ள நார்த்த வஞ்சகக்காரப் பயல் எவனோ, சிங்களவனிடம் கோள்கூறி அவரை ஏமாற்றியிருக்கிறான்:—தெய்வமே! இப்படிப்பட்ட அயோக்கியப் பயல்களை வெளிப்படுத்தி, அந்தத் திருடர்களைக் காசி முதல் கன்னியாகுமரிவரை, உலக முழுவதும், சாட்டையடி யடிக்கும்படி, ஒவ்வொரு யோக்கியர் கையிலும் ஒரு சவுக்கைக் கொடுத்தாலாகாதா!

அகா :—அடக்கிப்பேசு.

ஏம :—ஓ! அவர்கள் நாசமாய் போகட்டும்! அப்படிப் பட்ட பயல்களில் எவனோ ஒருவன்தான் உங்களு டைய புத்தியைத் தாறுமாறாக்கி, சிங்களவர் விஷ யமாக என்மேற் சந்தேகங் கொள்ளும்படி செய் ததும்.

அகா:—உனக்குப் புத்தி கிடையாது; நிறுத்து.

திசை:—அகாதா, நீ நல்லவன்: என்னுதர் பிரியத்தைத் திரும்பப்பெற நான் என்ன செய்யட்டும் சொல். நண்பனே, அவரிடம் போ; சத்தியமாய்ச் சொல்லு

கிறேன், அவரை எதனுலிழந்தேனே, நானறி
யேன். இதோ பிரமாணஞ் செய்கிறேன்:—மன
த்தினுலாவது செய்கையினுலாவது எப்பொழு
தேனும் நான் அவர் காதலை மீறி நடந்திருந்தா
லும்; அல்லது, என் கண்களோ, செவிகளோ, மற்
றெந்த இந்திரியமோ, அவருருவாலன்றி வேறெ
ந்த ரூபத்தாலேனும் சந்தோஷமடைந்திருந்தா
லும்; அல்லது, இன்னும், இப்பொழுதும், இது
வரையும், இனிமேயக்காலத்திலும்—அவரென்னை
உதறித்தள்ளி அனுதையாக்கி விலக்கிவைத்துவிட்
டாலும்—அவர்மேல் எனக்கு மிக்க காதலில்லா
விடினும், கடவுள் என்மேற் கருணையை முற்றும்
நீக்கிவிடுவாராக! மனக்கசப்பு எவ்வளவோ செய்
யக்கூடும்; அதினும் அவர்மனக் கசப்பு என் வாழ்
வெல்லாம் வீணுளாக்கிவிடக்கூடும்; ஆனல், என்
காதலைமட்டும் ஒருபொழுதும் பங்கமுறச் செய்ய
முடியாது.

அகா:—தயை செய்து சிறிது பொறுத்துக் கொள்ளுங்
கள்; இது ஏதோ தற்காலக் குணக்கேடேயன்றி
வேறில்லை; துரைத்தன காரியம் அவருக்குக் கோப
த்தை யுண்டாக்க, அவர் தங்களுடன் கோபித்
திருக்கிறுர்.—

திசை:—வேறென்றுமில்லாவிடின்.—

அகா:—அப்படியே தான்; நானுறுதி சொல்லுகிறேன்.

[எக்காள ஒலிகேட்கிறது]

உள்ளே போங்கள்; அழாதேயுங்கள்: எல்லாம் சீராகி
விடும்.

[திசைமோகினியும்; ஏமலீலையும் போகிறுர்கள்.]

[இரட்டையன் வருகிறான்.]

இர:—நீ என் விஷயத்தில் நியாயமாய் நடப்பதாகத் தோன்றவில்லை.

அகா:—அப்படிக்கின்றி யென்ன?

இர:—அகாநா, தினந்தோறும்யாதாறுமொருபோக்குச் சொல்லி என்னை எத்துகிறாய்; இப்பொழுது பார்த்தால், நம்பிக்கையை உண்டு பண்ணக்கூடிய நற்சமயங்களை எனக்குக் கொடுப்பதற்குப் பதிலாக, இயல்பாக நேரிடும் அற்பசொற்ப வாய்ப்புக்களையும் நீயே தடுப்பதாகவே தோன்றுகின்றது. நானினிமேற் பொறுக்கவே மாட்டேன்; இதுகாறும் மூட்டாள்தனமாய் அநுபவித்ததையும் வெளியிடாது சகித்திருக்கவுமாட்டேன்.

அகா:—நான் சொல்கிறதைக் கேட்கிறாயா, இரட்டையா?

இர:—நிச்சயமாகவே, இதுகாறும் கேட்டுக்கொண்டிருந்ததே அதிகம்; ஏனெனின், உன் வார்த்தைகளுக்கும் செய்கைகளுக்கும் ஒருவித சம்பந்தமுமேயில்லை.

அகா:— நீ என்மேல் அநியாயமாய்ப் படாப்பழி கூறுகிறாய்.

இர:—உண்மையைத்தவிர வேறில்லை. என் ஆஸ்திக்குமேலாகச் செலவிட்டாயிற்று. திசைமோகினிக்குக் கொடுப்பதற்கென்று நீ என்னிடம் வாங்கிக்கொண்ட நகைகள், அருந்ததியின் கற்புநிலையைக்கூடப் பாதி கெடுத்திருக்கும்: அவள் அவற்றை அங்கீகரித்துக் கொண்டதாகவும், சீக்கிரத்தில் அவள் கவனமும் பழக்கமும் எனக்குக் கிடை

க்குமென்றும் ஆறுதல்சொல்லி ஆசை மூட்டினாய்; ஆனால் ஒன்றையும் காணவில்லை.

அகா :—நல்லது; இருக்கட்டும்; நல்லது.

இர :—நல்லது! இருக்கட்டும்! நான் சும்மா இருக்கவும் மாட்டேன், அப்பா, அது நல்லதுமில்லை: இதோ கையடித்துக் கூறுகிறேன்: அது கெட்டதே; நீ என்னை எத்துகிறதாகவே தோன்றுகின்றது.

அகா :—சரிதான்.

இர :—நான்தான் அது சரியில்லையென்று சொல்லுகிறேனே. திசைமோகினியிடம் நானின்றொன்று தெரியப்படுத்துவேன்: என் நகைகளை அவள் திரும்பிக் கொடுத்துவிட்டால், என் முயற்சியை விட்டுவிட்டு, அக்கிரமமாக அவளை இச்சித்ததற்கும் மனஸ்தாபமுறுவேன்; இல்லாவிடின், நீயே எனக்கு உத்தரவாதி என்பதை நிச்சயமாய்க் கொள்.

அகா:—நீ சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லியாயிற்றா?

இர:—ஆம்; நான் செய்வதாக உத்தேசமில்லாத ஒன்றையும் சொல்லவுமில்லை.

அகா:—ஆஹா! நீகொஞ்சம் ரோஷமுள்ளவனென்பது இப்பொழுதுதான் எனக்குத்தெரிகிறது; ஆகவே, இந்த நிமிஷமுதல், எப்பொழுதுமிருந்ததைவிட மேலான அபிப்பிராயம் உன்னைப்பற்றிக் கொள்ளுகிறேன். உன் கையைக்கொடு, இரட்டையா: நீ என்மேல் பழிகூறியது மிகவும் நியாயமானதே; ஆயினும், உன் விஷயத்தில் மிக நேர்மையாகவே

நடந்திருக்கிறேனென்று இன்னும் உறுதியாய்க் கூறுகிறேன்.

இர:—அது வெளிக்குத் தோன்றவில்லை.

அகா:—அது வெளிக்குத் தெரியவில்லையென்பதை நான் ஒத்துக்கொள்கிறேன்; உன் சந்தேகம் உன் புத்திக்கூர்மையையும் நிதான அறிவையும் விளக்குகின்றது. ஆனால், இரட்டையா, எப்பொழுதினும் மேலான காரணங்களைக்கொண்டு, முன்னினும் உறுதியாக இப்பொழுது நான் நம்புகிறபடி, உன்னிடத்தில் ஊக்கமும், தைரியமும், ஆண்மையுமிருப்பது மெய்யாயின், இன்றிரவு அதைக் காட்டு: அடுத்த இரவு நீ திசைமோகினியை அடையாவிடின், இவ்வுலகத்தினின்றும் என்னுயிரை மோசத்தினும் சித்திரவதைகளினும் நீக்கிவிடு.

இர:—சரி, என்னதந்த? புத்திக்கு எட்டியதா? செய்யக் கூடியதா?

அகா:—ஐயா, உதயலன் ஸ்தானத்தில் காசிபன் நியமிக்கப்பட்டு, அவ்விஷயமாக கொற்கையிலிருந்து விசேஷ ஸந்நது வந்திருக்கிறது.

இர:—அது மெய்தானா? ஆனால் உதயலனும் திசைமோகினியும் கொற்கைக்குத் திரும்பிவிடுவார்களே.

அகா:—இல்லை; அவன் சிங்கப்பூருக்குப் போகிறான்; யாதானும் ஒரு விபத்தால் அவன் இங்கே தாமதிக்கும்படி நேர்ந்தாலன்றி, அழகிய திசைமோகினியைத்தன்னுடன் கொண்டுபோய்விடுவான்: அவன்

போவதை நிறுத்த, காசிபனை நீக்குதலைப்போல், ஒன்றும் அவ்வளவு நிச்சயமாய்ப் பலியாது.

இர:—அவனை நீக்குவதென்றால், உன் தாற்பரிய மென்ன?

அகா:—ஏன், உதயலன் ஸ்தானத்தை அவன் பெற முடியாமற் செய்துவிடுகிறது,—மூளை சிதற மண்டையை உடைத்துவிடுகிறது.

இர:—அதையா என்னைச் செய்யச் சொல்கிறாய்?

அகா:—ஆம், உனக்கொரு இலாபத்தையும் உரிமையையும் செய்து கொள்ளத் துணிவிருந்தால். இன்றிரவு அவன் ஒரு வேசி வீட்டில் சாப்பிடுகிறான்; நான் அங்கு அவனிடம் போகிறேன்:—அவனுக்குக் கிடைத்திருக்கும் கௌரவமான அதிர்ஷ்டத்தைப்பற்றி அவன் இன்னும் அறியான்; அவன் அங்கிருந்து போகும் வழியில் நீ காத்திருந்தால், உன்னிஷ்டப்படி வேலையைத் தீர்த்துவிடலாம்; பன்னிரண்டு மணிக்குமேல் ஒருமணிக்குள் அவன் செல்லும்படி நான் ஏற்பாடுசெய்கிறேன். நானும் பக்கத்திலிருந்து உதவி செய்கிறேன்; நாமிருவருமாக அவனை வீழ்த்திவிடலாம். வா, திகைத்து நிற்காதே, என் கூட வா; அவன் சாவு எவ்வளவு அவசியமென்று காட்டுகிறேன்; பிற்பாடு அதைச் செய்வது உன் கடமையென்றே நீ நினைப்பாய். இப்பொழுது இராப்போஜன காலம் கடந்துவிட்டது, இரவும் வீணாகக் கழிகின்றது; வேலையைப் பார்ப்போம்.

இர:—இதற்கு இன்னும் முகாந்தரங்கள் வேண்டும்.

அகா:—நான் உன்னைத் திருப்தி செய்கிறேன்.

[போகிறார்கள்.]

---

## ஐந்தாம் அங்கம்.

### முதல் காட்சி:

*செப்பறையில் ஒருவீதி— நள்ளிரவு.*

[அகாதனும், இரட்டையனும் வருகிறார்கள்.]

அகா:—இதோ, இந்தச் சுமைதாங்கி மறைவில் நில்; அவன் இப்பொழுதே வருவன்: உன் நல்ல கட்டாரியை உருவி வைத்திரு; நன்கு பாயக் குத்து: சீக்கிரம், சீக்கிரம்; ஒன்றுக்கும் அஞ்சாதே; நான் உன் அருகேயே இருக்கிறேன்; இது நம்மையாக்கும், அல்லது அழிக்கும்; அதை நினைந்துகொண்டு உன் மனவுறுதியைப் பலமாய்த் திடப்படுத்திக் கொள்.

இர:—கைவாய்ப்பில் கிட்ட இரு; நான் அதில் தவறிப் போகலாம்.

அகா:—இதோ, உன் கைப்பக்கமே: தைரியமாய் உன் இடத்தில் நில்லு.

[சிறிது பின்னிடுகிறான்.]

இர:—இதைச் செய்வதில் எனக்கு அதிக உற்சாகமில்லை; ஆயினும், அவன் போதுமான காரணங்கள் காட்டியிருக்கிறான். என்ன, ஒரு மனிதன் தானே போகிறான்:—என்வாளை உருவுகிறேன், அவன் சாகிறான்.

[தன் இடத்திற்போய் நிற்கிறான்.]

அகா:—(தனிமொழி) இப்பொழுது, இவன் காசிபனைக் கொன்றாலும், அல்லது காசிபன் இவனைக் கொன்

றாலும், இருவருமே ஒருவராலொருவர் மடிந்தா லும், எவ்விதமாயினும் எனக்கு இலாபமே. இரட் டையன் உயிரோடிருப்பின், திசை மோகினிக்குக் கொடுப்பதற்கென்று ஏமாற்றிவாங்கிய பொன்னுக் கும் நகைகளுக்கும், நான் அவனுக்குஉத்தரவாதஞ் செய்யவேண்டும். அதுஆகாது: காசிபன்ஜீவித்திரு ப்பின், அவன் தினசரி யொழுக்கத்தின் அழகும் அமைவும் என்னைக் குரூபமாகக் காணச் செய்கின் றன; அதுவுமன்றி, அவனிடத்தில் சிங்களவன் என்னைக் காட்டிக்கொடுத்து விடக்கூடும்; அது பேராபத்துக் கிடமாகும்: இல்லை, அவன் சாகவே வேண்டும்:—அப்படியே; அவன் வருகிற சத்தம் கேட்கிறது.

[காசிபன் வருகிறான்.]

**இர:**—அவன் நடைஎனக்குத் தெரியும்; அவன்தான். துஷ்டா! நீ செத்தாய்! [தன்னிடத்திருந்து பாய்ந்து காசிபனை குத்துகிறான்.]

**காசி:**—உனக்குத் தெரிந்ததைவிட, என் மேலங்கி நல்ல தாயிருந்திராவிடின், அந்தக்குத்து என் சத்துரு வேயாயிருக்கும். உன்னங்கியைப் பரீக்ஷிக்கிறேன்.

[கத்தியைஉருவிஇரட்டையனைக்காயப்படுத்துகிறான்.]

**இர:**—ஓ! நான் செத்தேன்! [அகாதன் தான் நின்றவிட த்திலிருந்து பாய்ந்து, காசிபனைக் காலின் பின்புறத்தில் வெட்டிவிட்டுப் போய்விடுகிறான்.]

**காசி:**—இனி எக்காலமும் நான் நொண்டியே.—கேள்வி முறையில்லையா? ஐயோ! கொலை! கொலை! [விழுந்து விடுகிறான்.]

**இர:**—ஐயோ! நான் பாதகனே!

காசி:—ஐயோ! உதவுவார் யாருமில்லையா?

இர:—யாரும் வரவில்லையா? ஆனால் இரத்தச் சோர்வால் நான் செத்தே போவேன்.

[அகாதன் ஒரு வெளிச்சத்துடன் திரும்பி வருகிறான்.]

அகா:—இவ்வளவு பரிதாபமாக இங்கே கூக்குரலிடுகிற நீங்கள் யார்?

காசி:—அகாதனா? ஓ! நான் நொண்டியாய்விட்டேன்; யாரோ பாதகர் என் காலை வெட்டிவிட்டார்கள்: எனக்குச் சிறிது உதவி செய்.

அகா:—ஐயோ, உபசேனாபதி! எந்தப் பாதகர்கள் இப்படிச் செய்தார்கள்?

காசி:—அவர்களில் ஒருவன் ஓடிப்போக முடியாமல் இங்கே சமீபத்தில் கிடக்கிறானென்று எண்ணுகிறேன்.

இர:—ஐயோ! இங்கே எனக்குதவி செய்யுங்கள்.

காசி:—அவர்களில் ஒருத்தன் அதோ கூப்பிடுகிறவன்.

அகா:—அடா, கொலைகாரச்சண்டாளா! அட காதகா, [இரட்டையனைக் குத்துகிறான்.]

இர:—அட, பாதக அகாதா! ஈவிரக்கமில்லாத நாயே!

அகா:—இருட்டில் கொலை செய்கிறதா! இந்தக் கொடிய திருடர்கள் எங்கே யொளித்திருக்கிறார்கள்?— இந்தப பட்டணம் எவ்வளவு நிச்சப்தமாயிருக்கிறது!—ஓ! கொலை! கொலை! [லக்ஷ்மணனும் கிருஷ்ணனும் வருகிறார்கள்.] நீங்கள் யார்? இஷ்டர்களோ, துஷ்டர்களோ?

லக்ஷ்ம:—எங்களை அறிந்தபின் மதிக்கலாம்.

அகா:—லக்ஷ்மணரா?

லக்ஷ்ம:—ஐயா, ஆம்.

அகா:—மன்னிக்கவேண்டும். இதோ காசிபர் துஷ்டர்கள ால் வெட்டுண்டு கிடக்கிறார்.

கிரு:—காசிபரா!

அகா:—எப்படியிருக்கிறது, அண்ணா?

காசி:—என் கால் இரண்டு துண்டாகிவிட்டது.

அகா:—ஐயோ, கடவுள் விலக்கட்டும்! ஒரு வெளிச்சம் கொடுங்கள்.—இது நாம் அறிமுகமா இல்லையா? ஐயோ! என் சிநேகிதன், உங்களுடைய இரட்டையனா? இல்லை:—ஆம், நிச்சயந்தான்; ஐயோ தெய்வமே! இரட்டையா!

கிரு:—என்ன, கொற்கை நகரத்தானா?

அகா:—அவனே, ஐயா; தங்களுக்கு அவனைத் தெரியுமோ?

கிரு:—தெரியுமோவா! தெரியும்.

[ஏமலீலையும் ப்ரியாங்கனையும் வருகிறார்கள்.]

ஏம:—ஐயா! என்ன விசேஷம்? என்ன விசேஷம், நாதரே?

அகா:—இங்கே இருட்டில், இரட்டையனாலும், தப்பியோடி விட்ட சில பயல்களாலும், காசிபர் தாக்கப்பட்டு, அவர் சாந்தருணத்திலிருக்கிறார்! இரட்டையன் செத்தே போனான்.

ஏம:—ஐயோ நல்ல கனவான்; ஐயோ! நல்ல காசிபரே

அகா:—ஏமலீலா, நீ போய்க் காசிபர் இன்றிரவு எங்கே சாப்பிட்டாரென்று கேட்டுத் தெரிந்து வா. என்ன! அதற்கு நீயேன் நடுங்குகிறாய்?

ப்ரி—என் வீட்டில்தான் அவர் சாப்பிட்டார்; ஆனால் அதற்காக நான் நடுங்கவில்லை.

அகா:—ஓஹோ! அப்படியா? வா, என்கூட, நீ.

ஏம:—சீ, சீ, வெட்கமில்லையே, பட்டி!

ப்ரி.—நான் பட்டியில்லை; இப்படி என்னைத் திட்டுகிற உன்னைப்போலவே, யோக்கியமாய் வாழ்பவள் தான்.

ஏம:—என்னைப் போலவா? சீ! வெட்கமில்லையே உனக்கு!

அகா:—பக்ஷமுள்ள கனவான்களே, நாம் போய், துர்ப்பாக்கியரான காசியரின் காயங்களைக் கட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வோம்.—அம்மாளு, வா; இதெல்லாம் விட்டுவிட்டு, நீ நடந்தபடி வேறு கதை சொல்லவேண்டும். ஏமலீலா, நீ அரண்மனைக்கு ஓடிப்போய், நம் பிரபுவுக்கும் பிரபுத்திக்கும் நடந்த சம்பவங்களைத் தெரிவி.—தயை செய்து நடவுங்கள். [தனக்குள்ளேயே] என்னை ஆக்குவதும், அல்லது முற்றும் அழித்துவிடுவதும் இவ்விரவே.

[போகிறார்கள்.]

---

## இரண்டாம் காட்சி.

செப்பறை அரண்மனையில் ஒருபள்ளியறை—
நள்ளிரவு—திசைமோஹினி படுக்கைமேல் தூங்குகிறாள்;
ஒரு தீபம் எரிந்துகொண்டிருக்கிறது—உதயலன் வருகிறான்.

உத:—அதுதான் காரணம், ஆம், என்மனமே, அதுதான் காரணம்;—தூய நக்ஷத்திரங்காள்! அதனை உங்களிடத்தில் வெளியிடேன்;—அதுதான் கா

ணம்.—ஆயினும், அவள் உதிரத்தைச் சிந்தேன்; பனியினும் தூயவெண்மையாயும், பளிங்கினும் அதிகம் மழுமழுப்பாயும் உள்ள அவள்மேனியை வடுப்படுத்தவும்செய்யேன். ஆனல்,அவள்சாகவே வேண்டும்; இல்லாவிடில், இன்னும் பல புருஷர்களை மயக்கி மோசஞ்செய்துவிடுவாள். தீபத்தை அவித்துவிட்டுப் பின்பு,—தீபத்தை அவித்துவிடுகிறது! ஒளியைக்கொடுக்கும் தீபமே, உன்னை யான் அவித்தபின்பு, என் மனம் வருந்தினல், உன் முந்திய ஜோதியைத்திரும்பவும் யான்பொருத்தக்கூடும்:—ஆனல், ஏ சிறந்த சிருஷ்டிப்பொருள்களின் சிரோமணி போன்றவளே! உன் (உயிர்) ஜோதியை ஒருகால் அவித்துவிடின், அஜ்ஜோதியைத் திரும்பவும் பொருத்தவல்ல தேவாக்நி எங்குளதோ அறியேனே! உன் ரோஜா மலரைப் பறித்தபின்பு அதற்கு மறுபடியும் ஜீவசக்தியைக் கொடுத்து வளரச்செய்ய என்னல் முடியாதே! அது வாடி உலர்ந்தேதீரும்;—மரத்திலேயே அதை மோந்துகொள்வேன்.—[அவளை முத்தமிட்டுக் கொண்டு] ஆ, பரிமளமான சுவாசமே! உன் இனிமை, தர்மசக்கரத்தையே தடுமாறச்செய்கின்றது!—இன்னும் ஒரு முத்தம்,—இன்னும் ஒரு முத்தம்;—இறந்த பின்னும் இவ்வண்ணமேயிரு, நான் உன்னைக் கொன்றுவிட்டு, பின்பு உன்மேற் காதலாயிருப்பேன்:—இன்னும் ஒரு முத்தம், இதுவே கடைசி: இவ்வளவு இனியது, இவ்வளவு பிராணபாயமாக இருந்ததேயில்லை. நான் அழுகிறேன், ஆனல் இந்தக் கண்ணீர் குரூரமானதே;

இந்தச்சோகம் தெய்வத்தன்மையது: அன்பிருக்கு மிடத்திலேயே அழிவையுண்டாக்குகின்றது.—அவள் விழிக்கிறாள்.

திசை:—யாரங்கே? பிராணநாதரா?

உத:—ஆம், திசைமோகினி. இன்றிரவு வழக்கம்போல் கடவுளைத் தியானம் செய்தாயிற்றோ, திசைமோகினி?

திசை:—ஆம், பிராணநாதா.

உத:—கடவுளுக்கு அறிக்கையிட்டு, அவர் கிருபையையும் மன்னிப்பையும் வேண்டிக் கொள்ளப்படாத குற்றம் யாதாயினும் நினைவுக்குவரின், உடனே அதன் பொருட்டுப் பிரார்த்தனை செய்துகொள்.

திசை:—ஐயோ, நாதரே, ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்.

உத:—சரி, செய், சீக்கிரமாகட்டும்; நான் சற்று விலகி உலாவிக் கொண்டிருக்கிறேன்: மரணத்துக்கு ஆயத்தமாகவில்லாத பொழுது, உன் ஜீவனைக் கொல்ல எனக்கிஷ்டமில்லை.

திசை:—கொல்லுதலைப்பற்றியோ பேசுகிறீர்கள்?

உத:—ஆம், அப்படியேதான்.

திசை:—ஆனால், கடவுளெனக்கிரங்குவாராக!

உத:—மனப்பூர்வமாய் அப்படியே நானும் பிரார்த்திக்கிறேன்!

திசை:—தாங்களும் அப்படிச்சொன்னால், என்னைக் கொல்லீர்களென்றெண்ணுகிறேன்.

உத:—இம்!

திசை:—ஆயினும் தங்களைக்கண்டஞ்சுகிறேன்; ஏனெனின், தங்கள் கண்கள் இவ்வாறு சுழலுகையில்,

தங்கள் கோபம் பிராணாபாயமானது; நான் மனமறிய ஒரு குற்றமும் செய்யாததால், நான் ஏன் பயப்பட வேண்டுமென்பது தெரியவில்லை; ஆயினும் என் மனத்தில் பயமுண்டாகிறது.

உத:—நீ செய்த பாவத்தை நினைத்துக்கொள்.

திசை:—தங்கள் மேலிலுள்ள ஆசையைத் தவிர, வேறொரு பாவமும் அறியேன்.

உத:—ஆம், அதற்காகத்தான் நீ சாகிறாய்.

திசை:—காதல் கொண்டதற்காகக் கொலைசெய்வதுண்டா? ஐயோ தங்கள் கீழுதட்டை ஏன் அவ்வாறு அதுக்குகிறீர்கள்? ஏதோ ஒரு கொடிய வெறி, தங்கள் சரீரத்தையே நடுக்குகின்றதே: இவையெல்லாம் துர்நிமித்தங்களே; ஆனால் எனக்கு விரோதமாக ஒன்றுமில்லையென்று, நான் நம்பிக்கொண்டிருக்கிறேன்,

உத:—பேசாதே; சும்மாவிரு!

திசை:—ஆகட்டும்; விசேஷமென்ன?

உத:—நான் அவ்வளவு பிரியமாய் வைத்திருந்து உனக்குக்கொடுத்த அந்தக் கைக்குட்டையை, நீ காசிபனுக்குக் கொடுத்தாயே.

திசை:—என் ஜீவன்மேலும் ஆத்மாவின் மேலும் சத்தியமாய்ச் சொல்லுகிறேன், நான் கொடுக்கவேயில்லை; அந்த மனுஷனை அழைப்பித்துக்கேளுங்கள்.

உத:—பிரியசகி! பத்திரம், பத்திரம், பொய்ச்சத்தியத்துக்குள்ளாகாதே; நீ உன் மரணக்கிடையில் கிடக்கின்றாய்.

திசை:—ஆனால் இப்பொழுதே சாகப்போகிறதில்லையே.

உத:—ஆம், தக்ஷணமே: ஆகையால், உன் பாவத்தைப் பூரணமாக ஒப்புக்கொள்; ஏனெனின், ஒவ்வொரு சங்கதியையும் நீ ஒவ்வொரு பிரமாணஞ்செய்து மறுத்தாலும், என் மனத்திற் குடிகொண்டு கொந்தளிக்கும் பலத்த சமுசயம், மாறவும் செய்யாது, அடங்கவும் செய்யாது; உன்னைக் கொல்லப்போகிறேன்.

திசை;—ஆனால் கடவுள் என்மேற் கருணைவைப்பாராக!

உத;—நானும் அப்படியே பிரார்த்திக்கிறேன்.

திசை:—ஆனால் தங்களுக்கும் இரக்கமிருக்கிறதா!—நானொருபொழுதும் தங்களுக்குத் தீங்கிழைத்ததில்லையே; தெய்வ சம்மதமாகப் பொதுவாய் ஒருவர் மேற்கொள்ளத்தக்க பக்ஷத்தைத் தவிர, காசிபரை ஒருபொழுதும் இச்சித்ததில்லையே; எப்பொழுதும் ஒரு அடையாளமும் அவனுக்கு நான் கொடுத்ததில்லையே.

உத:—கடவுளாணை, என் கைக்குட்டையை அவன் கையில் நானே பார்த்தேன்: கள்ளச் சத்தியஞ் செய்து, நீ என்மனத்தைக் கல்லாக்குகிறாய்: நான் தான் அவன்கையில் என் கைக்குட்டையைக் கண்டேனே.

திசை:—ஆனால் அவர் அதை எங்காவது கண்டெடுத்திருக்க வேண்டும்; நான் அதை அவருக்குக் கொடுக்கவேயில்லை:—இங்கு அவரை வரவழையுங்கள்; அவர் உண்மையை ஒப்புக்கொள்ளட்டும்.

உத:—அவன் வாய் அடைத்தாயிற்று; அகாதன் அதற்குத் தக்க ஏற்பாடு செய்துவிட்டான்.

திசை:—ஐயோ! என் மனம் அஞ்சுகிறதே, அவர் இறந்து போனரா, என்ன?

உத:—அவன் உரோமங்களெல்லாம், ஒவ்வொன்றும் ஒவ்வோர் உயிர் நிலையாயிருந்தாலும், பழி வாங்க வெழும் என் பெரும் பசிக்குப்போதா.

திசை:—அந்தோ! அவரும் மோசவலைக்குள்ளானர், நானும் கெட்டேன்!

உத:—சீ, பட்டி! என் முகத்து முன்பே அவனுக்கு அழுகிறயா?

திசை:—நாதா என்னை ஊரைவிட்டேனும் துரத்தி விடுங்கள்; கொல்லமட்டும் வேண்டாம்!

உத:—கிட கீழே, பட்டி!

திசை:—நானைக் கொல்லுங்கள்; இன்றிரவுமட்டும் நான் உயிரோடிருக்கட்டும்!

உத:—இல்லை. நீ திமிறினல்,—

திசை:—ஒரு அரைமணி நேரம் மட்டும்!

உத:—தொடங்கிய பின் நிறுத்துவதில்லை.

திசை:—ஒரே ஒரு நிமிஷம் சுவாமியை தியானித்துக் கொள்ளட்டும்.

உத:—இனி மேல் முடியாது.

[அவள் மூச்சை இறுக்குகிறன்.]

ஏம:—[உட்புறமாக] ப்ரபோ! ப்ரபோ! என்ன, ஓ ப்ரபோ!

உத:—யாரங்கே?

ஏம:—[உட்புறமாக] ப்ரபோ! தங்களுடன் ஒரு வார்த்தை சொல்லவேண்டும்.

உத:—ஆம்; அது ஏமலீலைதான்:—இதோ வருகிறேன்.—இவள் பிராணன் போய்விட்டது.—காசியன் சாவைப்பற்றி அவள் பேச வந்திருக்கலாம் கூப்பாடு பெரியதாயிருந்தது.--ஹா! இனி அசைவு கிடையாதே? பிணம்போல் அசைவற்று விட்டது.—அவள் உள்ளேவரலாமா? அது நல்லதா?—திரும்பவும் இவள் அசைகிறாளென்றெண்ணுகிறேன்:—இல்லை.—எப்படிச் செய்வது உசிதம்? அவள் உள்ளே வந்தால் அவசியம் என் மனைவியுடன் பேசுவாள்: என் மனைவி! என் மனைவி! மனைவியேது?—எனக்குத்தான் மனைவியில்லையே! ஐயோ! சகிக்க முடியவில்லையே! ஐயோ! கஷ்டகாலமே! இப்பொழுது சூரிய சந்திரரின் பூரண கிரகணம்போல் இருண்டு தோன்றுகின்றது; இந்த வேற்றுமையாற் பயமுற்ற பூமண்டலமே கண்ணயர்வதுபோல் தோன்றுகின்றது.

ஏம:—[உட்புறமாக] ப்ரபோ! தங்களுடன் பேச வேண்டுகிறேன்.

உத:—நான் உன்னை மறந்துவிட்டேன்: ஓ! ஏமலீலா, உள்ளே வா:—மெள்ள,—இதோ,—படுக்கைத் திரையை இழுத்து மூடுகிறேன்.—நீ எங்கேயிருக்கிறாய்?

[கதவைத் திறக்கிறான்—ஏமலீலை வருகிறாள்.]

இப்பொழுது என்ன சங்கதியாக வந்தாய்?

ஏம:—ப்ரபோ! அதோ கெட்ட கொலை நடந்திருக்கிறது.

உத:—என்ன, இப்பொழுதா?

ஏம:—இப்பொழுதே, ப்ரபோ.

உத:—இது சந்திரனது கிரகசார தோஷமே: பூமிக்கு அதிசமீபமாக அவன் வந்து, மனிதர்களைப் பைத்தியங் கொள்ளச் செய்கிறான்.

ஏம:—ப்ரபோ! இரட்டையன் என்ற ஒரு கொற்கை வாலிபரைக் காசிபர் கொன்றுவிட்டார்.

உத:—இரட்டையன் கொலையுண்டானு! காசிபனும் கொலை யுண்டானு!

ஏம:—இல்லை, காசிபர் சாகவில்லை.

உத:—காசிபன் சாகவில்லையா! ஆனால் கொலை இசைவு பிறழ்ந்துவிட்டது; பழிவாங்கும் இனிப்பும் கசப்பாய்விட்டது.

திசை:—அந்தோ! அநியாயமாய், அநியாயமாய்க் கொலையுண்டேனே!

ஏம:—ஐயோ! அதென்ன சப்தம்?

உத:—அதா! எது?

ஏம:—ஐயோ, பாவமே!—அது என் துரைச்சி சத்தமன்றோ.—ஐயோ ஒருவருமில்லையா! ஓ! உதவியொருவருமில்லையா! அம்மா! மறுபடியும் பேசுங்கள்! இனிய திசைமோகினி, என் இனிய எஜமானியே! பேசுங்கள்.

திசை:—ஒரு குற்றமுமே யன்றி நான் சாகிறேன்!

ஏம:—ஐயோ! யாரிப்படிச் செய்தது?

திசை:—ஒருவருமில்லை; நானே தான்; விடைகொள்கிறேன்: என் பக்ஷமுள்ள நாதருக்கு என்னை ஞாபகமூட்டு: ஓ! நான் போகிறேன்.

[மரணமடைகிறாள்.]

உத:—என்ன, அவளெப்படிக் கொலையடைந்தாள்?

ஏம:—ஐயோ! யாருக்குத் தெரியும்?

உத:—அதைச் செய்தது நானல்லவென்று அவளே சொன்னதை, நீ கேட்டாயே.

ஏம:—அவள் அப்படித்தான் சொன்னாள்: நான் உண்மையையே கூறவேண்டும்.

உத:—பொய் கூறி, அவள் எரிகின்ற நரகத்தையடைந்திருக்கிறாள்: நான் தான் அவளைக் கொன்றவன்;

ஏம:—அம்மட்டுக்கும் அவள் முன்னிலும் சிறந்த உத்தமியே; நீ முன்னிலும் கொடிய பைசாசமே!

உத:—அவள் கெட்டவழியிற் பிரவேசித்தாள்.

ஏம:—நீயவளைப் பொய்ப்பழி சாட்டுகிறாய்.

உத:—காசிபன் அவள் காதலைப் பெற்றிருந்தான். பொய்யோவென்று உன் புருஷனைக்கேள். நியாயமான காரணங்களின்றி நானிதைச் செய்திருக்கின் எந்தக் கொடிய நரகக்குழியுமே எனக்குப் போதாது. உன் புருஷனுக்குச் சகல விபரமும் தெரியும்.

ஏம:—என் புருஷரா!

உத:—உன் புருஷன்.

ஏம:—அவள் பதிவிரதாபங்கஞ் செய்தாளென்று சொன்னார்?

உத:—ஆம், காசிபனுடன்; இல்லாவிடின், அவள் உண்மையாயிருந்திருந்தால், மாசுவடுவற்ற ஒரே வைடூரியத்தால், கடவுள் இதைப்போன்ற ஒரு பேருலகைச் செய்துதரினும், அவளை நான் அதற்குப் பதிலாக கொடுத்திருக்கமாட்டேன்.

ஏம:—என் புருஷரா!

உத:—ஆம், அவன் தான் முதலில் எனக்குச் சொன்னான்.

ஏம:—என் புருஷரா!

உத:—என்னடி இப்படித் திரும்பத் திரும்பக் கேட்கிறாய்? உன் புருஷன் என்று தான் சொல்லுகிறேனே, வார்த்தை அர்த்தமாகிறதா? என் சிநேகிதன், உன் புருஷன், யோக்கியன், நல்ல யோக்கியனான அகாதன்

ஏம:—அவர் அப்படிச் சொன்னால், அவர் பாழான ஆத்மா, தினம் அரைக்குன்றிமணி எடையாக நரகத்திற்கிடந்து அழுகட்டும்! அவர் மனப்பூர்வமாய்ப் பொய் சொல்லுகிறார்: கரிப்பூநம் போன்ற உன்மேல் அவள் அதிமோகமான ஆசையாயிருந்தாளே.

உத:—ஹா!

ஏம:—உன்னாலானதைச் செய்: நீ செய்திருக்கும் இக் கொலை சுவர்க்கத்துக்கு எவ்வளவு இசையுமோ, அவ்வளவே நீயும் அவளுக்கிசைந்தவன்.

உத:—பேசாதே, சாவதானம்!

ஏம:—முழு மூடமே! ஒன்றுமே தெரியாத ஜடமே! நீ செய்திருக்கும் செய்கை—உன் வாளுக்கு நான் அஞ்சவில்லை.—இருபது ஜீவன்களை யிழக்கவேண்டியதாய் நேர்ந்தாலும், உன்னை நான் வெளிப்படுத்துவேன்.—கூவேகூ! கேள்வி முறையில்லையா! இக் களவன் என் எஜமானியைக் கொன்றுவிட்டான் கொலையோ கொலை!

[மந்தானனும், கிருஷ்ணனும், அகாதனும் வருகிறார்கள்.

மங்:—என்ன விசேஷம்? என்ன சங்கதி, சேனுபதி?

ஏம:—ஓ, நீர் வந்தீரா, நாதா? மனிதர்கள் தாங்கள் செய்யும் கொலைகளை உம் தலையில் சுமத்தும்படி நல்ல காரியஞ் செய்தீர்.

கிரு:—சங்கதியென்ன?

ஏம:—நீர் ஒரு மனுஷனுனல், இந்தப் பாதகன் சொல் லுவது பொய்யென்று ருஜுப்படுத்தும்: அவன் மனைவி கற்பிழந்தவளென்று நீரவனுக்குச் சொன் னதாக, அவன் சொல்கிறுன்: நீர் சொல்லவில்லை யென்று எனக்குத் தெரியும்; நீரவ்வித அயோக்கி யரல்ல: வாயைத் திறந்து பேசும், என் மனம் அடங்காது பொங்குகின்றது.

அகா:—நான் நம்பியதை அவருக்குச் சொன்னேன்; அவரும் அதன் உண்மையையும் பொருத்தத்தை யும் நேரிற் கண்டார்,

ஏம:—ஆனல் அவள் கற்புத்தவறினளென்று எப்பொ ழுதாயினும் நீர் சொன்னதுண்டா?

அகா:—சொன்னேன்.

ஏம:—ஆனல் நீர் சொன்னது பொய்யே, வெறுக்கத் தக்க பாழான பொய்யே; என் ஆத்ம சாக்ஷியாக, அது பொய்யே; ஒரு கெட்ட பொய்;--அவள் காசி பருடன் ஒழுக்கந் தவறி நடந்தாளா! காசிபரோ டென்று நீர் சொன்னதுண்டா?

அகா:—காசிபரோடு தான்- போ, உடனே வீட்டுக்குப் போ, நீ.

ஏம:—நற்குண தனவான்களே! நான் பேச விடை கொடுங்கள்: நான் அவருக்குக் கீழ்ப்படிந்து நட

க்கவேண்டியது கிரமமே; ஆனால் இப்பொழுதல்ல. நாதா, ஒருவேளை நான் வீட்டுக்குத் திரும்பவே மாட்டேன்.

உத:—ஐயோ! ஐயோ! ஐயோ!

[படுக்கைமேல் விழுகிறான்.]

ஏம:—ஆம்; கீழே விழுந்து கதறு; அதி மனோரம்மியமான மஹாராஜ்ஞியாகிய உத்தம பிராணியைக் கொன்றுவிட்டாயே.

உத:—[எழுந்து] இல்லை, அவள் கெட்டவளே!—அம்மான்! நான் தங்களைக் கவனிக்கவில்லை: சற்று முன்பு இக்கைகளால் கொலையுண்ட தங்கள் மருமகள், அதோ கிடக்கிறாள். இச்செய்கை பயங்கரமாகவும் கொடியதாகவும் தோற்றுவது எனக்குத் தெரியும்.

கிரு:—ஐயோ, திசைமோகினி! உன் தந்தை இறந்துவிட்டதற்குச் சந்தோஷமே படுகிறேன்.

உத:—இது பரிதாபமே; ஆயினும், அவள் காசிபனுடன் மானக்கேடான செய்கையை ஆயிரந்தரம் செய்தது அகாதனுக்குத் தெரியும்; காசிபன் அதை ஒப்புக்கொண்டான்: நான் முதலில் அவளுக் களித்த காதல் முத்திரையை, அவன் மதன லீலைகளுக்குப் பிரதியாக அவள் அவனுக்குக் கொடுத்தாள்; அதை நான் அவன் கையில் பார்த்தேன்: அது ஒரு கைக்குட்டை; ஒரு புராதனமான வஸ்து அது; என் தந்தை என் தாய்க்குக் கொடுத்தது.

ஏம:—ஏ, அசட்டுச் சிங்களவ! நீ சொல்லுகிற அந்தக் கைகுட்டையை நான் தற்செயலாய்க் கண்

டெடுத்து, என் புருஷன் கையில் கொடுத்தேன்; ஏனெனின் அவ்வளவு அற்பப் பொருளுக்குத் தகாத ஆவலுடனும் கவலையுடனும், அதைத் திருடிக்கொடுக்கும்படி அவன் என்னை அடிக்கடி கெஞ்சிக்கேட்டான்.

அகா:—அழுகற்கும்பியே! நீ பொய் சொல்லுகிறாய்.

ஏம:—கடவுள் சத்தியமாக, நான் பொய் சொல்லவில்லை, நான் பொய் சொல்லவில்லை, கனவான்களே.—ஏ கொலைகார மூடமே! உன் போன்ற ஒரு மௌட்டியனுக்கு அப்போர்க்கொத்த நற்குண மனைவியேனோ.

[அகாதன் ஏமலீலையைக் குத்துகிறான்.]

உத:—இவன் தலையில் விழ ஒரு இடியில்லையா? அடா, கைகாரப் பாதகா! [அகாதன்மேற் பாய்கிறான்; மந்தானன் உதயலன் வாளைப் பிடுங்கிக் கொள்கிறான்; அகாதன் வெளியே ஓடி விடுகிறான்.]

மந்:—இதோ, சிங்களவரிடமிருந்து நான் பிடுங்கிய இந்த வாளை நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள்; வாருங்கள், போவோம்; வெளியே நின்று நீங்கள் வாயிலைக் காத்துக் கொள்ளுங்கள்; அவரை வெளியே விடக்கூடாது; பாழான அடிமைப் பயலாகிய அந்தப் பாதகனை நான் பின் பற்றுகிறேன்.

[மந்தானனும் கிருஷ்ணனும் வெளியே போகிறார்கள்.]

உத:—என் வீரமும் போய்விட்டது; எந்த அற்பக் கற்றுக்குட்டியும் என் வாளைப் பிடுங்கலாயிற்று:-- யோக்கியதை ஒழிந்த பின்பு ஆண்மைமட்டும் இருப்பதேன்? எல்லாமே போகட்டும்.

ஏம:—ஏ, கொடிய சிங்களவ! அவள் உத்தம பதிவிர தையே; உன்மேற் காதலாயிருந்தாள்: நான் சொல்வது உண்மையானால், என் ஆத்மா மோக்ஷமடையட்டும்; அப்படியே நான் உண்மையைக் கூறிவிட்டு சாகிறேன்,--நான் சாகிறேன். [மரணமடைகிறாள்.]

உத:—இந்த அறையில் வேறொரு ஆயுதமிருக்கிறது; அது மலையாள தேசத்துக் கத்தி; பழுக்கக் காய்ச்சிப் பனியோடையில் தோய்ந்துப் பதஞ் செய்யப்பட்டது:-ஓ, இதோவிருக்கிறது அது:—அம்மான்! நான் வெளியே வரவேண்டும்.

கிரு:—[உட்புறமாக] அப்படி எத்தனஞ் செய்தால் பெரும் ஆபத்துண்டாகும்,

உத:—ஆனால் உள்ளே வந்து என்னுடன் பேசுங்கள் இல்லாவிடின், நிராயுதனேயாயினும், உங்களைத் தாக்குவேன்.

[கிருஷ்ணன் திரும்பி வருகிறான்.]

கிரு:—சங்கதி என்ன?

உத:—இதோ என் கையிலிருக்கும் ஆயுதத்தைப் பாருங்கள்; இதினும் சிறந்தது, எந்த யுத்த வீரனிடத்திலும் இருந்ததேயில்லை; என் சிறு புயத்தையும் இந்த நல்ல கத்தியையுமே துணையாகக் கொண்டு, தாங்கள் மதிப்பதினும் இருபது மடங்கு பலமான தடைகளையுங் கடந்து செல்லக்கூடிய நாளும் இருந்தது:—ஆனால், எல்லாம் வீண் பெருமையே! விதியை வெல்லவல்லவர் யார்? இப்பொழுது அப்படியில்லை.-நான் ஆயுதபாணியாயிருப்பினும், நீங்கள் பயப்படவேண்டாம்; இங்கேயே

என் பிரயாண அந்தம்; என் வாழ்க்கை முடிவு; என் வாழ்நாளாகிய மரக்கலம் இதற்கு மேல் ஓடாது. பயந்து பின்னிடுகிறீர்களா? அது வீண் பயமே; ஒரு சிறு துரும்பை உதயலன் மேல் வீசி னும், அவன் பின் வாங்குபவனே:—உதயலன் இனி எங்குச் செல்வது? இப்பொழுது நீ எப்படி இருக்கிறாய்? ஐயோ, அ தி ர் ஷ் ட ங் கெ ட் ட பெண்ணே! உன் உள்ளாடை நிறம்போலவே வெளுப்போயினையே! நம் செய்கைகளுக்கு உத் தரவாதஞ் சொல்ல, கடவுள் சந்நிதியில் நாம் சந்திக்கும் தருணத்தில், இப்பொழுதுள்ள உன் பார்வை, என் ஆத்மாவைச் சுவர்க்கத்தினின்றும் தள்ளா நிற்க, நரகத்துக் கிழுத்துச் செல்லும் கால தூதர் அதைப் பிடித்துக் கொள்வர். குளிர்ந்து விட்டனையே! என் கண்ணுட்டி! உன் தேன்மொழி யைப் போலவே குளிர்ந்துவிட்டனையே! அந்தோ நரகத்துக்கேற்றபாதகப் புலையனே நான்!வ!பைசா சங்களே! தெய்வீகமான இந்தக் காட்சியை நான் காணுதவண்ணம், என்னைச் சாட்டையாலடியுங்கள்! என்னைக் காற்றிலே அங்குமிங்கும் பறத்துங்கள்! எரியும் கந்தகத்தில் வெதுப்புங்கள்; திரவாக்கினி நிறைந்த ஆழ்ந்த கசங்களில் என்னைக் குளிப் பாட்டுங்கள்! ஏ, திசைமோகினி! திசைமோகினி! இறந்தனையே! ஐயோ! ஐயோ! ஐயோ!

[லக்ஷ்மணனும், மந்தானனும், ஒரு நாற்காலியில் வைத்துத் தூக்கப்பட்டுக் காசிடனும், அசாதனைக் கைதியாகக் கொண்டு உத்தியோகஸ்தர்களும், வருகிறார்கள்.]

லக்ஷ்ம:—இந்த மஹா துர்ப்பாக்கியனை அவசரக் காரன் எங்கே யிருக்கிறான்.

உத:—அது உதயலனே:—நான் இதோ இருக்கிறேன.

லக்ஷ்ம:—அந்தப் பறைப்பாம்பெங்கே? அந்தப் பாதகனை முன்னுற் கொண்டு வாருங்கள்.

உத:—பிசாசுகளுக்கு ஸ்தூல சரீரமில்லை:—நீ யொரு பிசாசானால் என்னுலுன்னைக் கொல்ல முடியாது.

[அகாதனை வெட்டி காயப்படுத்துகிறான்.]

லக்ஷ்ம:—அவரிடமிருந்து கத்தியைப் பிடுங்குங்கள்

அகா:—ஐயா, இரத்தம் பெருகுகிறது; ஆனால் மரண காயமில்லை.

உத:—எனக்கதில் மனவருத்தமில்லை; நீ உயிரோடிருப்பதே எனக்கிஷ்டம்; ஏனெனில், என் அபிப்பிராயப்படி, இறப்பது ஆனந்தமே.

லக்ஷ்ம—ஒரு காலத்தில் எவ்வளவோ உத்தமசீலராயிருந்து இப்பொழுது, ஒரு பாழான பாவியின் மோசவலையில் சிக்கியுள்ள உதயலரே! உம்மைப் பற்றி என் சொல்வது?

உத:—ஏன், யாதேனும் சொல்லலாம்: வேண்டுமாயின், ஒரு மானமுள்ள கொலைகாரனென்று கூறலாம்; ஏனெனின், நான் செய்ததெல்லாம் மானத்தின் பொருட்டேயன்றிப் பகைமையினுலன்று.

லக்ஷ்ம:—இந்தச் சண்டாளன் தன் சர்ப்பணையில் ஒரு பகுதியை ஒப்புக்கொண்டிருக்கிறான்: நீரும் அவனுமாகக் காசிபனை கொல்ல உத்தேசித்தீர்களா?

உத:—ஆம்.

காசி:—பிரிய சேனுபதி! இதையேற்க நான் ஒன்றுஞ் செய்ததில்லையே.

**உத:**—நீ சொல்வதை நான் நம்பவே செய்கிறேன், உன் மன்னிப்பையும் வேண்டுகிறேன்.—என் ஆத்மாவையும் சரீரத்தையும் ஒருங்கே, என், இவ்வாறு மோசவலைக்குள்ளாக்கினுனென்று, அந்த மனுஷப் பிசாசைக் கேளுங்கள்.

அகா:—என்னையொன்றும் கேட்கவேண்டாம்; உங்களுக்குத் தெரிந்தமட்டுமே நீங்கள் தெரியக்கூடியது: இதுமுதல் நான் வாய்திறந்து பேசேன்:

லக்ஷ்ம;—என்ன! கடவுளைப் பிரார்த்திக்கக்கூடவா?

கிரு:—சித்திரவதை செய்தால் உன் வாய் திறந்துவிடும்.

**உத:**—சரிதான்; நீ செய்வதே உத்தமம்.

லக்ஷ்ம:—ஐயா! நடந்த சங்கதிகள் உமக்குத் தெரியாதென்றெண்ணுகிறேன்:-சொல்லுகிறேன்கேளும், கொலையுண்ட இரட்டையனது அங்கிப்பையிலகப்பட்ட ஒரு கடிதம் இதோ இருக்கிறது; இதோ மற்றொன்றிருக்கிறது! இவற்றில் ஒன்று, காசியனை, இரட்டையன் கொலை செய்ய வேண்டியதைப்பற்றியது.

**உத:**—அடா பாதகா!

காசி:—மஹா மௌட்டியமான கொடும்பாதகனே!

லக்ஷ்ம:—அன்றியும், இதோ வெகு மனஸ்தாபத்தோடு எழுதப்பட்ட மற்றொரு கடிதமிருக்கிறது; இதுவும் அவன் அங்கிப்பையிலேயே இருந்தெடுக்கப்பட்டது; இதை, இரட்டையன் இந்தப்பாழான பாவிப்பயலுக்கு அனுப்ப உத்தேசித்திருந்ததாகத்தோற்றுகிறது;இதனிடையில், அகாதன்நேரிற்சென்று, அவன் மனத்தைத் திருப்தி செய்துவிட்டான் போலும்.

**உத:**—அடா நாசகாரப்பாவிப்பயலே! காசிபா, என் மனைவி கைக்குட்டை உனக்கெப்படிக் கிடைத்தது?

**காசி:**—அது என் அறையிற் கிடந்தது. தன் உத்தேசத்தை நிறைவேற்றற்கேற்ற ஒரு குறிப்பான காரியத்தின்பொருட்டு, நான் அதையங்கே போட்டு வைத்ததாக, அவனே இப்பொழுது ஒப்புக்கொண்டான்.

**உத:**--ஓ! நான் மடையனே!* மடையனே! மடையனே!

**காசி:**—அதுவுமன்றி, இரட்டையன் நிருபத்தில், காவற்கூடத்தில் என்னைக்கோபமூட்டிக் கலகஞ் செய்யும்படி தன்னைத் தூண்டியதற்காக, அகாதனை அவன் குற்றங் கூறுவதும் கண்டிருக்கிறது; அதனால் தான் என்னை வேலையினின்றும் நீக்க நேர்ந்தது: வெகுநேரம் செத்தாற் போல் கிடந்த இரட்டையன், இப்பொழுது சற்று முன்னரே அகாதனே தன்னைக் காயப்படுத்தினதாகவும், அகாதனே தன்னைத் தூண்டினதாகவும் சொன்னான்.

**லக்ஷ்ம:**—நீர் இந்த அறையை விட்டு எம்முடன் போக வேண்டும்: உம்முடைய அதிகாரமும் சேனாதிபத்தியமும் ரத்து செய்தாய் விட்டது; காசிபரே செப்பறையை ஆளுவார். இந்தப் புலையனுக்கோ,—சீக்கிரம் உயிர் போய்விடாது, நெடுங்காலம் கடுமையாய் வாட்டவல்ல தந்திரமான சித்திரவதை ஏதேனும் புத்தி சாதுரியத்தால் செய்யக்கூடுமாயின், அதுவே அவனுக்குரிமை. உம்முடைய குற்றத்தின் தன்மையை கொற்கையாளிக்குத் தெரிவிக்கும் வரையும் நீர் கடுங்

காவலில் இருக்கவேண்டும். வாருங்கள், அழைத்து வாருங்கள்.

உத:—சற்றுப் பொறுங்கள்; நீங்கள் போகுமுன் இரண்டொரு வார்த்தை: கொற்கையாளிக்கு நான் ஏதோ சிறிது சேவகம் செய்திருக்கிறேன். அது அவர்களுக்குத் தெரியும்;—அதைப்பற்றி அதிகமாய்ப் பேசவேண்டியதில்லை.—இந்த நிர்ப்பாக்கியமான சம்பவங்களை உங்கள் நிருபங்களில் விவரிக்குங்கால், நான் உள்ளபடியே என்னைப்பற்றிக் கூற, உங்களை வேண்டிக்கொள்கிறேன். ஒன்றையும் மழுக்கவேண்டாம், ஒன்றையும் க்ஷாத்திரத்துடன் வற்புறுத்தவும் வேண்டாம்: அவ்வாறு கூறப்புகின், நிதான அறிவோடின்றி, மட்டுக்கு மிஞ்சிய காதல் கொண்டவனாகவும்; எளிதில் சமுசயப்படாதவனேயாயினும், பிறர் சூழ்ச்சித்திறத்தால் சமுசயங் கொண்டபோது நிராமனக் குழப்பமுற்றவனாகவும்; தன் சாதியாரனைவரையும் விற்றாலும் ஈடாகாத விலையுயர்ந்த முத்தொன்று தன்கையிலிருந்ததை, ஒரு மதியீன மிலேச்சனைப் போல், தூர எறிந்து தொலைத்து விட்டவனாகவும்; உருகியினகும் சுவபாவம் இல்லாதவனேயாயினும், அராபிய விருக்ஷங்கள் மருந்துப் பிசினை விரைந்து சொரிவது போல, சோகத்தால் நெகிழ்ந்த கண்களால் கண்ணீர் சொரிபவனாகவுமே என்னைப்பற்றி நீங்கள் பேசவேண்டும். இவ்வாறு கூறுங்கள்; அன்றியும், இதனையும் சொல்லுங்கள்:- மக்கத்தில் ஒரு நாள், துஷ்டனான அராபிய னொருவன், கொற்கை நகரத்தானொருவனை அடித்து,

கொற்கைத் துரைத்தனத்தைப்பற்றி அவதூறாகப் பேசியபொழுது, நான், அந்த அராபிய நாயைக் கழுத்தைப்பிடித்து, இப்படியே குத்தினேன்,

[தன்னையே குத்திக்கொள்கிறான்.]

நாடகம் முற்றிற்று.

# அநுபந்தம்.



1. பீடிகை:—இந்நாடகத்தின் முதனூல், ஆங்கில நாடகப் புலவராகிய வில்லியம்ஷேக்ஸ்பியர் இயற்றிய, "ஒதெல்லோ, அல்லது, வெனிஸ்மோரியன்" என்னும் ஆங்கில நாடகமே. தாமஸ் கார்லைல் என்னும் ஆங்கில மேதாவி, இந்தியாவின் சக்ராதிபத்யத்தையேனும் ஷேக்ஸ்பியர் நாடகங்களையேனும் இழக்க வேண்டுமென நேரின், ஆங்கிலராவார், தங்கு தடையின்றி, இந்தியா தேசத்தையே இழக்கத் துணிவர் என்று கூறியிருக்கிறார். ஷேக்ஸ்பியர் நாடகங்களுக்கு நூற்றுக்கணக்கான வெவ்வேறு பதிப்புகள் இருக்கின்றன; ஆங்கிலத்தில் மட்டுமோ, வேறு பாஷைகளிலும், அவற்றின் வியாக்கியானங்களாகவும் மொழிபெயர்ப்புக்களாகவும் பிறந்துள்ள கிரந்தங்கள், எண்ணிறந்தன; அவர் பிறந்த வீட்டை ஒரு பெரிய ஞாபக க்ஷேத்திரமாகப் பாராட்டி, ஆண்டாண்டு தோறும், பல நாட்டுக் கலைஞரும் ஆன்றோரும் சென்று அதைத்தரிசித்து வருகின்றனர்; நாகரிகவிருத்தியால், தாய்மொழியாளர்க்கு மட்டுமின்றி, உலகர் அனைவர்க்குமே இக்காளிலே பொதுவுடைமையாகிவிட்ட பல்வேறு பாஷைகளிலுள்ள உத்தம இலக்கியங்களைக் கற்றறிந்த வித்தியாசாகரர் பலர், கவிச்சக்ரவர்த்தியென்னும் புகழ்ப்பட்டத்துக்குரியவர் வில்லியம் ஷேக்ஸ்பியரே என்று கூறியிருப்பதுமன்றி, அவர் நாடகங்களையே மானிடபுத்தி சாத்தியத்துக்கோர் எல்லைவரம்பாக மதித்துக்கொண்டாடியிருக்கின்றனர். இத்துணைச் சிறப்பு வாய்ந்த கவீந்திரரின் பெருமையைத் தமிழ்நாட்டார்க்கும் ஒருவாறு தெரிவிக்க வேண்டி, அவர் நாடகங்களுள் அதி சிலாக்கியமானதாகச் சில பண்டிதரால் மதிக்கப்பெற்ற "ஒதெல்லோ" நாடகத்தைப் பதினைந்து வருஷங்களுக்கு முன்னர், தமிழிலே மூலத்தொடு

முற்றும் பொருந்த மொழிபெயர்த்து, ஷேக்ஸ்பியர் சரித்திரம், அவர் பிரபந்தங்களின் அட்டவணை, பொதுப்பாயிரம், நாடகவரலாறு, வியாக்கியானங்கள், குறிப்புரை, புலவர் உருவப்படம் முதலியவற்றுடன் வெளியிட்டேன். அப்பதிப்பின் பிரதிகள் இப்பொழுது கிடைப்பதரிது. அவ்வாறு மொழிபெயர்த்தலே தகுதியென்பர் ஒருசாரார்; அங்ஙனமின்றிக் கதையையும் பெயர்களையும் தமிழகத்துக்குப்பொருந்த மாற்றியமைத்து, மூலகிரந்தத்தின் உட்கருத்தொடுமட்டும் முரணாது தமிழ்மொழிக்கிணங்க அமைத்துக்கொள்வதே திறமென்பர், மற்றொருசாரார். பின் கொள்கையைத் தழுவியதே இம்மொழிபெயர்ப்பு. சுத்தத்தமிழர்க்கு, இது முன்னதினும் எளிதில் பொருள் விளங்குமென்று நம்புகிறேன்; அன்றியும், இப்பதிப்பில், ஸர்ஹென்ரி ார்விங் என்னும் அரங்கக்கோ, அரங்காடுதற்கென்றே ஷேக்ஸ்பியர் நாடகங்களைச் சுருக்கிப் பிரசுரித்துள்ள பதிப்புக்கிணங்க, மூலத்திலுள்ள சிலகாட்சிகளும் பேச்சுக்களும் நீக்கப்பட்டிருத்தலால், இப்பதிப்பு, காவியரசத்தில் சிறிதும் குறைவுபடாது, நாடகமாடுதற்கேற்ற வண்ணம் சுலபமாயிருக்குமென்றும் நம்புகிறேன்.

ஷேக்ஸ்பியர் சரித்திரம்:—பின்காலத்திலே இவ்வண்ணம் பூதலமெல்லாம் போற்றிப்புகழும் புலவர்பெருமான், அவர் காலத்திலே அவ்வளவு சிறப்பொடு பாராட்டப்படவில்லையென்பது திண்ணம். அவர் சீவியசரித்திரம் எதுவும் நமக்குக் கிடைத்திலது; ஏழுகாவியங்களும் முப்பத்தேழு நாடகங்களும் அவரியற்றியுள்ளாரெனினும், அவற்றின் ஒன்றின்பிரதியேனும், அவர்கைப்பட நமக்கு எட்டியிலது; இம்மட்டோ, இரண்டோரிடங்களில் அவர் இட்டியுள்ள கையொப்பங்களைத் தவிர, அவரால் எழுதப்பட்ட லிகிதமோ, மற்றெவ்வித எழுத்தோ, ஒன்றுமேயில்லை. ஆயினும், திருவள்ளுவர் கம்பர் போன்ற புலவர் திலகரின் இயற்பெயரையும் அறியாத நம்மால் இது பரிகசிக்கத்தக்கதன்று; பிற்காலத்து ஆங்கில வித்துவான்கள், அவர்காலத்துப் பல்வேறு கிரந்தங்கள், பத்திரங்கள், சாசனங்கள், கடைக்கணக்குகள், ஜனனமரணப் பட்டிகைகள், விஞ்

தங்கள் முதலிய உபகரணங்களைக்கொண்டு, இடைவிடாது ஆராய்ச்சி செய்து, அவர் சரித்திரத்தை நிர்ணயித்து நிருமாணஞ் செய்திருக்கும் அற்புத காட்சியே, நம்மால் வியந்து, ஏன்றமட்டும் பின்பற்றுதற் குரியது. அச்சரித்திரம், சுருக்கிக் கூறின், பின்வருமாறும்: 23—4—1564ல், இங்கிலாந்திலே, ஆவாணுற்றுக்கரை ஸ்ட்ராட்போற்டு என்னும் ஊரிலே, ஹென்லிவீதியிலே, ஜான் ஷேக்ஸ்பியர் என்ற கையுறை வியாபாரிக்கும், அவர் மனைவி மேரி ஆர்டன் என்பாளுக்கும் மூன்றாவது குழந்தையாகவும் மூத்த மகனுகவும் வில்லியம் ஷேக்ஸ்பியர் பிறந்தார். அவர் கல்விப் பயிற்சியைப்பற்றி அநுமானமேயன்றி, உறுதியாக ஒன்றுந் தெரிந்திலது. தமது பதினெட்டாம் வயதில் அவர் தம்மினும் ஏழாண்டு மூத்த ஆநிஹாதவே என்னும் பெண்ணைக் காதலித்து மணம்புரிந்து, மறு வருஷம் (1583) ஸுஸானா என்னொரு பெண்மகவைப்பெற்றெடுத்தார். 1585ல், மறுபடியும் ஹாம்னெட் என்ற ஆண்குழந்தையும் ஜூடித் என்றோர் பெண் குழந்தையும் இரட்டையாகப் பிறக்கவே, புலவர் பெருமான் கழுத்தில் சமுசார நுகத்தடி அழுத்தத் தொடங்கிற்று. சகடக்கால் போலவரும் அதிர்ஷ்டவசத்தால், இதற்குள், அவரைப் பெற்றோர் வறுமைப் பட்டனராக, வேறு ஜீவனோபாய வழியின்றி, ஷேக்ஸ்பியர், இராஜதானியாகிய லண்டன் மாநகரைச் சென்றடைந்தார். 1586 முதல் 1604 வரையுள்ள பத்தொன்பதாண்டுகளை, அவர், வேஷம்பூண்டு நாடக மாடுவதிலும், காவியங்களும் நாடகங்களும் இயற்றுவதிலும், பிறரியற்றிய நாடகங்களை அரங்காடற் கேற்பத் திருத்தி யமைப்பதிலும், நாடகசாலைகளைப் பங்காளியாகவும் முதலாளியாகவும் மேல் நடத்துவதிலும், இத்தொழில்களால் தமது முதல் கருத்தாகிய பொருளைச் சம்பாதிப்பதிலும், லண்டன் பட்டணத்தில் கழித்தார். லண்டன் சென்றபின், நாளுக்கு நாள் செழிப்பேயன்றி, அவர் வறுமையை அறிந்திலர்; வாழ்க்கை நிலைமையிலும் மேம்படலானர். தாம் பிறந்த ஊரின்மேல் மிக்க வாஞ்சை பாராட்டி வந்தார்; தமது தாய் தந்தையர்க்கும்

தமக்கு வேண்டிய பிறர்க்கும் தம்மாலேன்றமட்டும் கையுதவினார். 1596ல், அவர் மகன் ஹாம்நெட், ஸ்ட்ராட்போர்டில் இறந்து போனான்; 1601ல் அவர் தந்தை தேகவியோகமானார்; 1602-ல், ஷேக்ஸ்பியர், 320 பவுன் கொடுத்து 107 ஏக்கர பூமியையும் ஒருவீட்டையும், மறு வருஷத்தில் 60 பவுன் கொடுத்து ஒரு பழத்தோட்டத்தையும் பண்டசாலையையும் ஸ்ட்ராட்போர்டில் விலைக்கு வாங்கினார். அந்நாளை நாடகசாலை முதலாளிகள் அட்டவணைகளில், இவர் பெயர், 1589-ல் பதினாறு பேர்களுள் பன்னிரண்டாவது தானத்தும், 1596-ல் எட்டுப்பேர்களுள் ஐந்தாவது தானத்தும், 1603-ல் ஒன்பது பேர்களுள் இரண்டாவது தானத்தும் காணப்படுகின்றமை, விடாமுயற்சியால் இவர் கைக்கொண்ட சீவனோபாயத்தில் தளராது மேன்மையுற்றதை விளக்குகின்றது. 1604-ல் இவர், லண்டனை விட்டுத் தம்மூர் வந்து சேர்ந்தார். பின்பும், சில சொத்துக்களை விலைக்கு வாங்கியும்; புதிதாய்த் தாமியற்றிய நாடகங்களின் தலையரங்காட்டத்தை மேல்நோக்கியும்; 1607-ல் தம்மகள் ஸூஸானாவை டாக்டர் ஜான்ஹால் என்பவருக்கு விவாகம் செய்துகொடுத்தும்; அதேயாண்டில்இறந்ததம்கடைசித் தம்பியின் உத்தரகிரியைகளை நடத்தியும்; தோட்டத்தில் விருக்ஷங்கள் நட்டும்; தமக்கு வரவேண்டிய கடன்பொருட்டு விவாதம் செய்தும்; கடன்காரன் ஒளித்தோட, பிணை நின்றானைப் பின்பற்றியும்; இப்பிரவர்த்திகளுக்கு வேண்டியவாறு தம்மூரிலும் லண்டனிலுமாக வசித்தும், காலங்கழித்தார்.

1612ல், லண்டனை முற்றுந்துறந்து, தம்மூரடைந்தார். பின்பும் அவர் சில சொத்துக்கள் கொள்ளவும், ஒரு வியாசசியம் தொடரவும் நேர்ந்தது. லண்டனை முதற்கண் 1604-ல் விட்டபின், அவர் எட்டு நாடகங்களியற்றினார். அவர் பிரபந்தங்களில் ஏதேனும் முதல் முதல் அச்சிடப்பட்டது, 1593ம் வருஷத்தில் தான். 1616ம் வருஷத் துவக்கத்திலேயே, தம் அந்திமகாலம் நெருங்கி நின்றதை அகக் கண்ணால் அறிந்தார் போல, அவர், மரணசாசனப் பத்திரத்தை எழுதிவைத்ததுமன்றி, தம்மகள் ஜூடித் என்பவளை, 10-2-1616ல், தாமஸ்

குவைனி என்டவருக்கு விவாகஞ் செய்து கொடுத்தார். அவர் மரணஹேது இன்னதென்று உறுதியாய்த் தெரிந்திலது. 23—4—1616ல், தம் ஐம்பத்திரண்டாவது பிறந்த நாளன்று அவர் தம் பொய்யுடம்பை நீத்துப் புகழுடம்பை எய்தினார், ஞாயிறும் திங்களும் உள்ளளவும் அப் புகழுடம்பு அழியாதென்பது பெரியோர் துணிபு.

**ஷேக்ஸ்பியர் நாடகங்கள்:**—கிரேக்க நாடகவிலக்கணப்படி, ஒவ்வொரு நாடகமும், ஒரேயிடத்தில், ஆடுதற்காகும் கால் வரம்புக்குள் நடக்கக்கூடிய சங்கதிகளையே பற்றியிருக்கவேண்டும். இவர் அவ்விதியை அநுசரியாது, தம் மனத்துக்கு இசைவாகத் தோன்றியவாறு, நாடகங்களையியற்றியுள்ளார். அநேகமாய் இவர் கதைகளை யுண்டாக்குவதில்லை, பழைய சரித்திரங்களிலும் கதைப்புத்தகங்களிலுமிருந்து, தமக்கிஷ்டமான கதையைத் தெரிந்தெடுத்து, வேண்டியவாறு சிறிது மாற்றியமைத்துக் கொண்டு; பின்பு தாம் எடுத்துக் கொண்ட கதை, அவ்வாறு நிகழ்ந்து முடிதற்கு என்ன காரணம், அதன் பாத்திரங்கள் என்ன என்ன குணத்தினராய், ஒழுக்கத்தினராய் இருந்திருப்பார் என்பதை, தம் அரிய பெரிய மூளைவலியாலும், உலக ஞானத்தாலும், சொல் வன்மையினாலும், நாடக ரூபமாக விஸ்தரிக்கின்றார். இவ்வாராய்ச்சியிலும், மதியூகத்திலும், அநுபவ ஞானத்திலும், சொல் திறமையிலுந்தாம் இவர் அருமை பெருமைகள் விளங்குகின்றன. இவ்வாறு, இருவரேனும்முற்றும் ஒவ்வாராய் வேறுபட்ட ஆண் பெண்களிற் பலரையே தமது நாடக பாத்திரங்களாகக் கொண்டு, அவரவர் நடையுடைபாவனைகளையும், உள்ளக் கருத்துக்களையும் சிறிதும் பிறழாது அணுவும் மாறாது, அவரவர் வாய் மொழிகளினாலேயே தெரிவித்து, ஒரு கணத்தைப் பல்லாண்டு போலவும் பல்லாண்டுகளை ஒரு கணம் போலவும் தம்மாய வித்தையாற் காட்டி, கதை நிகழ்ச்சியைக் கரதலாமலகம்போல் விளக்கி, நாற்புறமும் நவரசங் கொழிக்க நடித்துக் காட்ட வல்ல மகாசூத்ரமாகிய இவரது மனோ சக்தி அம்மம்ம! அளப்பரிதே. "உலகத்தினுள், மனிதனிற் பெரிய

தோன்றில்லை; மனிதனுள், மனத்திற் பெரிய தோன்றில்லை" என்பது ஆன்றோர் முதுமொழி. அம்மனத்தின் சலனங்களை யும், விருத்திகளையும், சேஷ்டைகளையும், ஆச்சரியங்களையும், இவரினும் நுண்மையாயறிந்தவர் எவருமேயில்லையென்று கூறலாம். இவர் எழுதிய நாடகங்கள் முப்பத்தேழாம்; அவற் றைச் சரித்திர நாடகங்கள், சோகரசமே மிகுந்துள்ள துன் பியல் நாடகங்கள், விகடமும் சந்தோஷமுமே மிகுந்துள்ள இன்பியல் நாடகங்கள் என்று பிரிக்கலாகும். துன்பியல் நாட கங்களே இவற்றுள் சிறந்தவை. அவற்றுள்ளும், 'ஒதெல்லோ' நாடகமே அதிசிரேஷ்டமானதென்பார் பலர். இனி, அவ் 'ஒதெல்லோ, அல்லது 'உதயலன்' என்னும் நாடகத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்,

உதயலன் நாடகம்:—இது துன்பியல் நாடகங்களைப் போலாது, இதன் கதை, சிறிதும் விடிவு வெளிச்சமின்றி, ஒரே துக்ககரமாயிருப்பது, இதற்கொரு குறையென்றே சொல்லவேண்டும்; அன்றியும், விளையும் துன்பம், அநியாய மாயும், தகாததாயுமே மேற்பார்வைக்குத் தோற்றுகின்றது. இதனுண்மை சிறிது ஆராயத்தக்கது; ஏனெனின், அவ்வாறு நல்லார் அகாரணமாய்க் கெடுவதாயும், தீயார் வெல்வதாயும் காட்டுவது, உலகுக்கு நன்மை பயப்பதன்று.

உதயலன்:—நாடகத்தலைவனான இவன், பாண்டி நாட் டிலே கொற்கையில் உத்தியோகமாக வந்திருக்கும் ஒரு சிங் களவன். இவனைப்பிறநாட்டானாகக்குறித்திருப்பது, ஊரிலுள்ள மற்ற ஜனங்களினின்றும் வித்தியாசப் படுத்திக்காட்டி, இவன் குண குணங்களை நன்கு விளக்கும் பொருட்டே. ஜனகரமான கொற்கை நகரிலே, இவன், பிறர் சகவாசமும் பழக்கமும் அதிக மின்றித் தனித்தே வசிக்கிறான். பலமான உள்ள நிகழ்ச்சி களையும் கோபதாபங்களையுமே பிறவிக்குணமாக வுடைய இவன், இளம் பிராயந்தொட்டு, யுத்தங்களில் கஷ்ட நிஷ்டூ ரங்களை அனுபவித்து, மனத்தையடக்கி, இடைவிடாத அப்பி யாசத்தால் மனவமைதியைப் பெற்றிருக்கிறான். ஆயினும், மனக்குழம்பிவிடின், இவன் பிறவிக்குணம் வெளிப்பட்டுவிடு

கின்றது. இளமை கழிந்தவனேயெனினும் திசைமோகினி யைக் காணுமளவும் இவன் காதற் சூட்டை யறிந்திலன்; அச் சூடுறைச்சலே, தன் நிறையழிந்து, அதன் வயப்பட்டொழுகு கிறுன்: தன் உபசேனபதி வேலைக் சூரியவனுகிய அகாதனை விலக்கி, அவ்வுத்தியோகத்தைக் காசிபனுக்குக் கொடுத்தது, தன் காதல் விஷயத்தில் காசிபன் செய்த உதவியின் பொரு ட்டே. அகாதன் பகைமைக்கு இதையே முக்கிய காரண மாக்கி, உதயலன் நாசத்துக்குத் துவசாரோகணம் போல் அதைச் சுட்டியிருப்பது, கவியின் நியாய நிரூபண நுண்ண றிவை நன்கு விளக்குகின்றது, அதுவுமன்றி, காசிபன் உட் கையாயிருந்து தூதுசென்றதையே, உதயலன் மனத்தில் சமு சயத்தை உண்டாக்க அகாதன் துணைக் கருவியாகக் கொள் கிறுனன்றே? உலக வாழ்க்கையிலே, தற்பயிற்சி மட்டும் போதாது; கடமைப் பற்றும் முக்கியமாக வேண்டும்; அஃ தின்மையினுல்தான், தன் மானவுணர்ச்சியும், அடக்கமும் தற்பயிற்சியுமுள்ள சிங்களவன், கொலை, தற்கொலை முதலிய பாதகங்களைச் செய்யும்படி நேருகின்றது.

நல்லார் பொல்லாராதலும், பொல்லார் நல்லாராத லும், உலகின்கண் படிப்படியாகவே நிகழும். உற்றுநோக்கின், உதயலனது குணத்தாழ்ச்சியின் ஒவ்வொரு படியையும் அறிய லாம்: துரைத்தன விஷயத்தில் தன் காதற்பற்றைக் காட்டி, காசிபனை உபசேனபதியாகநியமித்துக்கொண்டதே முதற்படி தன் பிரயாண விருத்தாந்தங்களில், திசைமோகினியின் மன த்தை இளக்கும் பொருட்டுப் பலவிதமாய்க் கதை கட்டிப் பேசி யதை இரண்டாம்படியாகக் கொள்ளலாம்; பின்பு, யாவரும் தன்னிடம் உபேக்ஷையாகவிருந்த கொற்கை நகரத்தில், அன் பும் ஆதரவும் யரியாதையுமாகத் தன்னை நடத்திவந்த பிறை பூண்டானை வஞ்சித்து, அவன் ஒரேமகள் காதலைக் களவாய்க் கவர்ந்ததுமன்றி, யோக்கியமாக நேரில் அவன் அநுமதியைப் பெறுது,அநுபவக் குறைவாலும் காதல் மிகுதியாலும் அவளே இணங்கினும் தான் தடுத்துப் புத்திபுகட்டுவது தன் கடமைய யிருக்க, நம்பின நண்பனை வஞ்சித்து, அவளை திருட்டுத்தன

மாகக் கலியாணஞ் செய்துகொள்கிறான். இவ்வாறு நெறிபிற ழ்ந்தமையால், அசாதனது வஞ்சனை வலையிற்சிக்குண்டு,அவன் தந்திரங்களால் தீரா மனக்குழப்பமுற்று, இயற்கையில் அமை ந்த துர்க்குணங்களின்மேலீட்டால் அதிசீக்கிரத்தில் நாசமடை கிறான். தன் மனைவிமேற் சமுசயம் பிறந்தவுடன், அவளிட த்து நிகழ்ந்தவற்றைக் கூறி உண்மையை அறிந்துகொள்ளாது கைக்குட்டை விஷயமாகப் பல பொய்கள் உரைத்துப் பயமுறு த்தி, அவளாகவே உண்மையுரைப்பதையும் தடுத்து, முடிவில் கொலையும்புரிந்து தற்கொலையுஞ் செய்து கொள்கிறான்.

முதல் அங்கத்தில், இவன் அரிதில் தேடிய உபகுணங்க ளாகிய மனவமைதியும் அடக்கமுமே பிரகாசிக்கின்றன. இர ண்டாவது அங்கம் தொடங்கி, முதற்கண் அதி சந்தோஷமும் பின்பு அதிதாபமும் உண்டாகி, இயற்கைக் குணங்களே மேலி ட்டு ஆட்சிபெற்று, மஹா பாதகங்களிற் புகுத்திவிடுகின்றன. ஆயினும், முடிவுவரையும், அவன் உயர் குணத்திற் சிறிது தங்குகின்றது: தன் குற்றங்கட்கு மரணதண்டனையே தக்க தென்ற கருத்துக்கொண்டே, தன்னைக்குத்திக்கொண்டு மடி கிறான். இவ்வுணர்ச்சி மிகக்கொண்டாடத்தக்கதே. சுருக்கிக் கூறின், உதயலன் கம்பீர குணசீலனுயினும், அநுபவ ஞானத் தாலும் தற்பயிற்சியினாலும் பெறற்கரிய உபகுணங்களைப் பெற் றவனுயினும், சாதாரணமான சில வேட்கைகளுக்குக் கிரமம் தவறி இடங்கொடுத்ததனாலும், கடமையை அறிந்து கைப்பிடி யாததனாலும், ஒரு கொடிய வஞ்சகன் வலையிற் சிக்கி, முற்றி லும் நாசமடைகிறான். இந்நாசம் அவன் குற்றங்களினுலேயே விளைகின்றது; தினைத்துணைக் குற்றம், உயர்குண சீலனுகிய அவன் விஷயத்தில், பனைத்துணைக்கேட்டை விளைக்கின்றது. ஷேக்ஸ்பியர் வெகு கண்டிப்பான நீதி போதகரேயன்றி. சுவபாவ விரோதமாக ஒன்றுங் கூறுவதில்லை.

தீசைமோகினி:—இவள், மனத்தூய்மையிலும் மென் குணங்களிலும் ஒப்புயர்வற்றவள், இந்த அம்சத்தில் ஷேக்ஸ் பியர் நாடக பாத்திரங்களில் இவள் உத்கிருஷ்டமானவள்

ஒருவிதச் சீர்கேடும் நேர்ந்திராவிடின், இவளும் சிங்களவ
னும் குறைவற்ற வாழ்வு வாழ்ந்திருப்பார்கள். இவளோ மிகச்
சாந்தகுணத்தினள்; மனைமாட்சிக்கேற்ற நற்குணங்கள் நிறைந்
தவள்; எளிதில் இணங்கும் மனநயமுடையவள்; அவனோ
மனவுறுதியும், யுத்தப்பிரியமும், பிடிவாதமும் பொருந்திய
வன். ஆகவே, அவர்கள், ஒருவருக்கொருவர் மிக்க இயை
புடையவரே: இவள் மனத்தூய்மையாலும் நாணத்தாலும்
அசுசியானவொன்றுமே இவளை அணுகுகிறதில்லை; அகாதனைத்
தவிர்த்து மற்றெல்லோரும் இவளுக்கு மரியாதைக்காட்டிக்
கவுரவஞ் செய்கின்றனர்; சாசிபனும் ரமணீலையும் இவள் பழக்
கத்தினாலேயே மிக்க குணசிரேஷ்டமுறுகின்றனர். ஆயினும்
இவள் சர்வோத்தமியல்ல; அவ்வெண்ணமிருப்பின், அகாதன்
இவளை நாசத்துக்குட்படுத்தியிருக்கமுடியாது. இவளிடத்தில்
குற்றமில்லையெனினும், நடக்கையிற் பழுதுகளிருக்கின்றன.
இவள் கணவனைப்போலவே, இவளுக்கும் கடமை நினைவுசிறிது
மில்லை. தம் மனப்போக்கின்படியே அவர்கள் நடக்கிறார்கள்'
நல்ல மனப்போக்கும் கூட நாசத்தில் முடியக்கூடுமென்பதை
இவள் விஷயத்திற் காணலாம். எவ்வமயத்தில் எவ்விழைவு
தன் மனத்தின் கண்ணுள்ளதோ அதன் வயப்பட்டொழுகுபவளே
யன்றி, இவள், பிற விஷயங்களையும் ஆலோசித்து, தன்
கடமையின்னதென்றறிந்து, நடக்கவல்லவள் அல்லள்: சிங்
களவனை இவள் காதலித்தது கிரமமே; ஆனால் அக்காதல் பற்
றித் தன் தகப்பனை மறந்திருக்கக்கூடாது. தன் மனத்திற்
புதிதாய் உதித்த காதல் வயப்பட்டுத் தன் கடமையை முற்றும்
மறந்து விடுகிறாள்; கறுத்த சிங்களவனைக் காணவும் அஞ்சு
பவள்போல் நடித்து, பின்பு அவனுடன் கரந்தோடித் தன்
தகப்பனை வஞ்சிக்கிறாள்; அவர் மேல் இவளுக்குச் சிறிதுமே
இரக்கமில்லை; அவர் விஷயத்தில் அநுதாபத்தைக் காட்டும்
ஒரு மொழியேனும் இவள் கூறிலள்; தன் புது மணாளனைப்
பற்றிய எண்ணங்களில் ஆழ்ந்து மதிமயங்கி, மிக்க மனக்கொடு
மையை வெளியிடுகிறாள். முதலில் தன் தந்தையை வஞ்
சித்ததற்கும், யுத்தத்திற்குச் செல்லும் தன் கணவனைப்

பின்பற்றியதற்கும், கைக்குட்டையைப்பற்றிப் (பயத்தால்)
பொய் கூறியதற்கும், காசிபன்பொருட்டுப் பிடிவாதமா
யும் மூடத்தனமாயும் மன்றாடியதற்கும், பின்பு தன்னை
உதயலன் கொலை புரிகையில் தன்னடக்கையின் தவ
றின்மையையும் நியாயத்தையும் எடுத்துக் காட்டாது, அறி
வீனமாய்க், கூச்சலிட்டு உயிர்ப்பிச்சை வேண்டியதற்கும்,
முடிவில் காதலால் (தூண்டப்பட்டு) தெய்வத்தன்மை பொரு
ந்தியதோர் பொய்யுரைத்ததற்கும், இவள் மனப்படியொழு
கும் ஒழுக்கமும், ஆலோசனையின்மையுமே காரணம். யாவர்க்
கேனும் தீங்கிழைக்கும் எண்ணம் இல்லாதவளேயெனினும்,
தன் கடமையிதென்றறிந்து அதன்படி யொழுகவேண்டு
மென்ற அவாவின்மையால், தனக்கும் பிறர்க்கும் நாசமூல
மாகின்றாள். ஆலோசனையின்மையே இவளிடத்துள்ள
பெருங்குறை.

அகாதன். — இத்துணைக் குணக்கேடரும் உலகத்தில்
உளரோ? ஆதியோடந்தம் இவனிடத்தில் நற்குணவாசனையே
இல்லையே! ஆயின், நாம் நாடகத்தைப் படிக்கும்பொழுது,
இவன் குணம் சுபாவ விரோதமாகத் தோன்றுகிறதா? அகா
தனைப்போன்ற மனிதர் இவ்வுலகில் மிக அருமையே; ஷேக்ஸ்
பியர் நாடகங்களிலும் அவ்வாறே. இவன், தீக்குணத்தில்இணை
யெதிரற்றவனே; மானுஷகுணம் எவ்வளவு தாழ்வுற்றிழியக்
கூடுமென்பதை, ஷேக்ஸ்பியர், இவன் மூலியமாய்க்காட்டினர்
போலும். அவர் கூறியிருப்பது அசாதாரணமேயன்றி, அசாத்
தியமானதல்ல. தீக்குணத்தர் பெரும்பாலும் புத்தியிற் சிறந்
தவரே; அகாதன் அதிசமர்த்தன்; யுத்ததந்திரங்களில் மிகத்
தேர்ந்த வீரன்; மனோதைரியமும் நிலைகலங்கா அமைதியும்
பொருந்தியவன்; மிக்க பொறுமையுடையவன்; சமயத்துக்
கேற்ப இசைந்து நடக்கவல்லவன்: சித்தவிருத்தியைத் தவிர்
த்து, மற்றவையெல்லாம் கொண்டாடத்தக்கனவே. நற்சிந்தை
யொழிய ஏனையவெல்லாம் அமைந்துள்ள ஒருவன், உலகவாழ்
க்கையில் என்னகதியை அடைவானென்பதைக் காட்டுவதே
ஷேக்ஸ்பியரின் நோக்கம். அகாதன் முதலில் காரியசித்தியடை

கிறான்; எல்லாம் இவன் எண்ணப்படியே நிறைவேறுவது
போல் தோன்றுகின்றன; ஆனால், முடிவில் திடீரென நாசம்
வந்து மூடிக்கொள்கின்றது. இவ்வளவு சமர்த்தன் இவ்வித
மாக ஆகாசக்கோட்டை கட்டியதென்னை? உண்மையில், இவ
னுக்கு நற்சிந்தையின்மை மாத்திரமன்று, நற்குணத்தில் நம்
பிக்கையேயில்லை. நாமிவனைக் காணுமுன்னமே, இவன் தன்
மனச்சாக்ஷியை முற்றும் தன்வயமாக்கி அடக்கிவிட்டான்.
திசைமோகினியின் கற்பில் இவனுக்கு நம்பிக்கையில்லை.
வாழ்க்கைச் சிறப்பும், உயர்பதவியும், பணமுமே இவன் மதித்து
விரும்பும் பொருள்கள். அவ்விஷயத்தில், சிங்களவன் தன்
நன்மைக்கு விரோதமாகக் காசிபனை உபசேனாபதியாக நிய
மித்துக்கொள்ளவே, அகாதன் பழிவாங்க நிச்சயிக்கிறான்.
இக்காரணம் இவன் கோபத்தை முதலிற் கிளப்பியது; பின்பு
இவன் தீச்சிந்தையே மேலிட்டு வேண்டியவற்றை நடத்தியது.
தன் விஷயத்திற் சிறிதும் சம்பந்தப்படாதவரும் தான் பழி
வாங்குகையாற் சேதமுறுவரென்பதைப்பற்றி, இவன் சிறிதும்
எண்ணவில்லை. தீங்கிழைப்பதே இவனுக்கு ஆனந்தமாய் விடு
கிறது; பிறர் துன்பங்களைக்கண்டு இவன் மனங்களிக்கிறான்;
தன் சாமர்த்தியத்தைத் தானே வியந்து மகிழ்கிறான்; பிறர்க்
குறும் துன்பத்தைக் கண்டு தானடையும் களிப்பில், பழிவாங்
கும் எண்ணங்கூட சீக்கிரம் மறக்கப்படுவதுமன்றி, தன்
கைகளினாலேயே தன் மனைவியைக் கொலை செய்யும்படி உத
யலனைத் தூண்டியதில் சந்தோஷமடைகிறான். காசிபன் காய
முற்ற விஷயத்தில் ப்ரியாங்கனையும் சம்பந்தப்பட்டவளாக
இவன் அநுமானப்பட்டுக் கூறியதற்கு, கெட்ட குறும்புத்தன
மும், குற்றமொன்றுஞ் செய்யாத ஒரு அசட்டுப்பெண்பிள்ளை
யை ஹிம்ஸை செய்வதனால் தான் அடையும் சந்தோஷமுமே
காரணம். பழிவாங்கும் ஆசையால் தூண்டப்பட்ட இவன்,
வெகு சீக்கிரத்தில் தீங்கிழைப்பதையே ஆநந்தமாகக்கொண்டு,
அதில் அளப்பரிய மகிழ்ச்சியடைகிறான். இவன் அனாவசியக
மாக ஒரு பொய்யுரைப்பதில்லை. நன்மை தீமையென்ற
வித்தியாசம் பார்க்காத இவனுக்கு வாய்த்த அதிதீவிர புத்தி,

குரங்கின் கைப்பட்டதோர் கூரிய சத்தியாய்விடுகிறது. இவன் மிகக் கெட்டவன்; ஆகவே முற்றிலும் தௌர்ப்பாக்கியனே.

காசியன்:—இவன் யுத்த சாமர்த்தியத்தைக் குறித்து அகாதன் கூறியது பெரும்பாலும் உண்மையே. இவன் பிறர் பேச்சுக்கு எளிதில் இணங்குபவன்; அதிகமாய்ச் சாதுரிய மாய்ப் பேசுபவன்; பிறரால் மதிக்கப் பெற்றவனல்லன், அற்பன்; இவனிடத்தில் யாரும் மட்டுமரியாதையின்றி நடக்கிறார்கள்; மதுபானத்தால் இவன் மூளை எளிதில் கலங்கிவிடுகிறது; சிறுபிள்ளைத்தனத்தால் இவனுக்கு ஒரு தூர்த்தையின் சம்பந்தம் ஏற்படுகிறது. ஆயினும், இவன்பால் வியக்கத்தக்க சில நற்குணங்களுள: திசைமோகினியை இவன் பூஜ்யதை செய்வதே இவன் உயர்குணத்தை விளக்குகிறது; தான் குடித்து வெறிகொண்டதற்கு இவன் மனக்கிலேச மடைவதும், தன் குற்றத்துக்காக மனம் வருந்தி அதன் பொருட்டு நேர்ந்த தண்டனை தக்கதேயென்றுணர்வதும், நற்குணங்களே; ஆயினும், அகாதன் சில மொழிகள் கூறவே, சுவபாவமான அற்பத்தனமேலீட்டால் தன் குற்றத்தையெல்லாம் மறந்து விடுகிறான். சிங்களவனுக்காகப் பரிதாபப்பட்டு, அவன் மேலான குணங்களைப் புகழ்வதும், இவன் உயர்குணத்தை விளக்குகின்றது.

பிறைபூண்டான்:—இவன் மிக்க அன்புள்ள தந்தையே; ஆயின், அகம்பாவக்காரன்; ஒருவரிழைத்த தீங்கை மறப்பது மில்லை, மன்னிப்பதுமில்லை; ஆதலின், தானும் கேடுற்றுப் பிறரையும் கெடுக்கிறான்.

ஏமலீலை:—இவள் ஒரு சாதாரணப் பெண்பிள்ளை; மேன்மையான குணங்கள் இல்லாதவள்; உலக வழக்கத்தை அநுசரித்து ஒழுகுபவள். திசைமோகினியின் சேர்க்கைவாசனையால், இவள், வரவர குணசிரேஷ்டம் அடைந்து, உற்ற சமயத்தில் சிறிதும் தன்னயங் கருதாது உண்மையை அஞ்சாமல் உரைத்து, பெருந்தன்மையாக இறக்கிறாள்.

இரட்டையன்:—இவனும் ஒரு சாதாரண மனிதனே; அசாதன் சகவாசதோஷத்தால் முற்றிலும் சீர்குலைந்து இழிவாய் மடிகிறான்.

சுருக்கிக்கூறுமிடத்து, இத்துன்பியல் நாடகம், உலகத்தில் வாழ்க்கைப் பேற்றை அடைதற்குக் கடமைப்பற்றும் இடையறா நல்லொழுக்கமும், ஆழ்ந்த ஆலோசனையின் விளைவான நிதான அறிவும், மனவுறுதியும், அடக்கமும், இன்றியமையாத கருவிகள் என்ற உண்மையையும்; ஸ்திரீ விஷயத்தில் தக்க ஆராய்ச்சியின்றிக் கொள்ளப்படும் அருமையின் தீவிளைவையும்; இயற்கைப் பொருத்தமில்லாத விவாகங்களினால் பொதுவாயேற்படும் கேட்டையும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குகின்றது.



PRINTED AT THE SWADESAMITRAN POWER PRESS.